

ஜூலை, 1984

விலை ரூ. 1/-

# ஸப்தகிரி

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



மைவிடாது எழுநீலகண்டம் குருவே
விஷ்ணு வடிவான ஞான குருவே
மலர்மேவி மறையோது நான்முகக் குருவே
மதங்கள தோறும் நிறை குருவே
கைவிடாதே எனறு அன்பர்ககு அனபாய்
அவர் அறிவா உணர்த்து குருவே.

—தாயுமானவா.




தனிப்பிரதி ரூ. 1

வருடச் சந்தா ரூ. 12

ஜூலை, 1984

மலர் 15

இதழ் 2





**பிரதிகளுக்கு :**

THE WELFARE OFFICER

Publication Section, T.T.D.

K. T. Road,

TIRUPATI.


## உள்ளுறை



27-ம் பக்கத்தில் வெளியிடப்பட்டுள்ள கட்டுரையின் ஆசிரியர் பெயர் "திரு. வி. ஸ்ரீதர்" என்பதற்குப்பதிலாக "திரு. சுப்ரமணியன் சாலை" என்று தவறுதலாகப் பிரசுரிக்கப் பட்டுள்ளது. ஏற்பட்ட தவறுக்கு மன்னிக்க வேண்டுகிறோம்.

(ஆ-ர்.)

# உங்களுடன்....

"நாம் எங்குப் போய்க் கொண்டிருக்கின்றோம்" எனும் கேள்வியை எழுப்புமுன்பு "நான் எங்குப் போய்க் கொண்டிருக்கின்றேன்" என்பதை நம்மிடையே எழுபபிக் கொண்டால், அது முந்தைய வினாவிற்கு ஒரு பதிலைத் தர ஏதுவாக அமையும். இறைவனது படைபபுக்களிலேயே அதிசயமானது மனிதப்படைபபு. ஒருவா போல் மற்றொருவர் இல்லாது-நிறத்தாலும், உருவத்தாலும, குணத்தாலும-மாறுபடும் வகையில் நாள்தோறும் ஆயிரக்கணக்கில் மனிதர்களைப் படைத்துக் கொண்டிருக்கும அபபரமனின் படைப்புத திறத்திறகு நிகரேது! இத்தகு அரிய பிறவியை பெற்றுள்ள நாம் நன்றி கூறும் வகையில் அபபரம்பொருளைத் தினமும தொழுதேத்திடவேண்டாமோ? ஆம், நம்மில் பலர்நாளும் காலையும் மாலையும இவ்இறைவனை வழிபடுகின்றோம. இதில சிறிதும் ஐயமிலலை. ஆனால் அவ்வாறு தொழுதேத்துமபோது, அதன் உட்பொருளை நாம அறிய தவறுமபோதுதான், அத்தொழுகைக்குப் பயன இல்லாது போய விடுகின்றது. மனம் செம்மையடைய வேண்டும, மக்கள் மாண்புற விளங்க வேண்டும எனற உனனத நோக்கத்தில்தான மனிதன இறைவனை நாடுதல் வேண்டும். இதனைத்தான் எல்லா சமயங்களும உணர்ததுகினறன. ஆசைகளைக்களைதல வேண்டும், பிற உயிர்களை துன்புறத்தல் தகாது என்று பௌத்தமும், அன்பும், மன்னித்தல பண்பும உயாவானது எனறு கிறித்துவமும, சகோதரத்வத்தின் பெருமையை இஸ்லாமும, மனிதப்பிறவியின பெருமையைத் தெரிவிக்கும் வகையில் மனிதனிடமே தெய்வீகத் தன்மைகளைக் காணும் தத்துவ முறைகளையும்-நடைமுறை கூறுகளையும கூறிடும இந்து சமயமும் மனிதனை உயர்வடையச் செய்யும் இயக்கங்களாக விளங்குகினறன.

உடலுக்கும், இவ்வுடல உள்ள இவ்வுலகத்திறகும், அவ்வுலகத்தைப் படைத்திட்ட அப்பரம்பொருளுக்கும் உள்ள உனனத உறவினை விளக்கிட வந்த இச்சமய இயக்கங்களின் இலட்சியங்களையும், அறிவுரைகளையும் பரப்ப வந்தவர்களே சமயத் தலைவர்களாவர். இவர்களையே தங்களது தலைவர்களாகக் - ஆசார்யர்களாகக் கொண்டு விளங்குவர் அவ்வவ் சமயதது மக்கள். இங்குதான் 'குரு' எனும பதவியின உயாவு பேசப் பெறுகின்றது. அன்பையும் பொருளையும் பெற்றோர்களிடமிருந்து பெறும் மனிதனுக்குப பின்னர் இப்பிறவியின் அடிபபடை இலட்சியமான அப்பரம் பொருளை அடையும் வழியினைக் காண்பிக்கும் ஒரு கலங்கரைவிளக்கமாக 'குரு' எனும் பதவி விளங்குகிறது. பள்ளியிலும் கல்லூரியிலும ஆசிரியர்கள் மூலம் அடிப்படை கல்வி பெறும் மாணவன் முழு மனிதனாக மாறும்போது, வாழ்க்கைக் கல்வியினைக் கறக-தன் பிறவியின நோக்கத்தை நிறைவேற்ற சமயத் தலைவர்களின பணி இன்றியமையாததாக அமைகின்றது. அதுவும் ஒவ்வொரு இந்தியனின் உள்ளத்திலும அவரவர்களுடைய சமய உணர்வு ஒன்றித்து விளங்குகின்றது. ஏனெனின் அவனுக்குச் சமயமே வாழ்க்கையாகும. ஒருவன் தன்னைத் தானே உணரத் தலைப்படும்போது, பிறரை உணருகின்றான். அதனால் பிரசசனைகள் எழுவதிலலை. அதறகுச் சமய அறிவு துணைபுரிகின்றது. எல்லா சமய இலக்கியங்களும் அனபின் அருமை, அமைதியின் ஆற்றல, ஒழுக்கத்தின் உயர் பெருமை, கடமையின் சிறபபு போன்ற மனிதன் மனிதனாக வாழ வழி வகுக்கும் பண்பு நலன்களையே வலியுறுத்துகின்றன. இப்பெருமைமிகு சமயங்களின், அதன் இலக்கியங்களின் சிறபபினை விளக்க வந்த சமயத் தலைவர்கள் வெறும் சமய போதகர்களாக மட்டுமன்றி சமூக சீர்திருத்தவாதிகளாகவும் இருந்தனர். இதனால் மானிடம் மாண்புறலாயிற்று. இவ்வகையில சங்கரர், இராமானுஜர், மத்வர், கௌதமர், குருநானக், குருகோவிந்த் சிங், குரு அர்ஜுன் சிங், சுவாமி வித்யாரண்யா, பரமஹம்ஸர், விவேகானந்தர் போனறோர் இயறகையினையும் இறைவனையும் நமக்கு உணர்த்தி, நம்மிடம இறைமைப பண்புகள் வளர்ந்திட போதனைகள் பலவிட்டுச சென்றுள்ளனர். இதனால்தான இமயம் முதல் கன்னியாகுமரி வரையிலும, காசி காட்டிலிருந்து அமிர்தசரஸ் வரையிலும் மககள் இந்தியர்களாக விளங்கி வருகின்றனர். இத்தேசிய - இச்சமய ஒருமைப்பாடு சீர்குலையும் வண்ணம சமயபபுரவலர்களே கைகளில் வாளேந்தினால், அச்சமயத்தின் பெருமையைக் கூறும் கோவில்களே போர்க்கூடாரங்களானால் நாம அழிய நமக்குப் பகைவர்கள் தேவையில்லை, நமக்கு நாமே பகைவர்களாவோம். வேற்றுமையில் ஒற்றுமை கண்டு வாழும் நம் நாடு, ஒற்றுமையில பல பேதங்களை கற்பித்தால் – சமயத் தலைவர்கள் உண்மையான சமூகத் சீர்த்திருத்தவாதிகளாக விளங்கத் தவறினால – நாட்டிலுள்ள தொழுகைத் தலங்களான கோயில்கள் யாவும் சமய–கலாச்சாரத் தூண்கள் என்பதை உணர மறந்தால், நாம நம்மை மனிதர்கள் என்று கருதிக் கொள்வதில் சிறிதும் பொருள் இல்லை.

# செய்திச் சுருக்கம்

### நெல்லூரில் பொன்விழா

அண்மையில் ஆந்திர மாநிலம் நெல்லூரில் தி.தி.தே. திருமணக் கூடத்தில்தி. தி.தே. பொன்விழா நிகழ்ச்சி மிகச சிறப்பாகக் 2 நாட்கள் கொண்டாடப்பட்டது. முதல்நாள் விழாவிற்கு நெல்லூர் மாவட்ட இணை மாவட்டத்தலைவர் திரு. ஐ வை. ஆர். கிருஷ்ணராவ அவர்கள சிறப்பு விருந்தினராக வருகை புரிய அனறு காலையும மாலையும பல சமய நிகழ்ச்சிகள் நடைபெறறன. அனறு காலை தி.தி.தே. இந்து தர்ம ரக்ஷண சமஸ்தாவின் செயலாளரின் உதவியாளர் திரு. இ கருணாகரன அவர்கள் 'கோவிந்தாமிாதம்' எனும் நிகழ்ச்சியினை நடத்தியதும, ஸ்ரீவங்கல பட்டாபிபாகவதர் அவர்களின் ஹரிகதை நிகழ்ச்சியும் அன்றைய விழாவின் சிறப்பு அமசங்களாகும. இரண்டாம் நாள் விழாவிற்கு அம்மாவட்ட காவல் கண்காணிப்பாளர் திரு கே. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் சிறப்பு விருந்தினராக வந்திருந்தார். அன்று நடைபெற்ற மல்லாதி சந்திரசேகர சாஸ்திரி, திரு. எம. கொணடமாசார்ய, ஸ்ரீபிரசன்னனந்தசுவாமி ஆகியோரின சிறப்புசமயச்சொற்பொழிவுகளும், திருமதி. ஆர். துர்க்காம்பா பாகவதரணி அவர்களின ஹரிகதை நிகழ்ச்சியும் முககிய இடம் பெறறன. (இவ்விழா சம்பந்தப்பட்ட புகைப் படங்களை 2-வது உள் அட்டைப்பக் கத்தில் காணலாம்)

### ஏல விற்பனை

அணமையில் திருப்பதி திருமலை திருப்பதி தேவஸ்தான நிர்வாகக் கட்டிடத்தில் 5 நாட்களுக்கு தி. தி. தேவஸ்தானத்தாரின் 74 கி. கி. எடையுள்ள, கற்கள் வைத்த தங்க நகைகள் பொதுமக்கள் முன்பு ஏலத்தில் விற்கப்பட்டன. இதனுல் தி. தி. தேவஸ்தானததிற்கு ரூ 1.03 கோடி கிடைத்தது. இவ்வாறு தி. தி. தே. தங்க நகைகள் ஏலம் விடுவது இது இரண்டாம் முறையாகும் மேலும், 20 வருடங்களாக தன்னிடம் உள்ள 600 கி கி. எடையுள்ள தங்க நகைகளில் 200 கி.கி எடையுள்ள நகைகளை ஏலத்தில் விற்பனை செய்ய, தி. தி தே. மறுபடியும மத்திய அரசிடம அனுமதி கேட்டுளளது. ஏலத்தில விற்பனை செய்யப்பட்ட தங்க நகைகளின் புகைப் படங்கள சில இவ் இதழின் 3-வது உள் அட்டைப் பக்கத்தில் வெளியிடப்பட்டுள்ளன.

### வெளிநாட்டில் கோயில்கள் கட்டுவதற்கு தி தி. தேவஸ்தானத்தாரின் நிதி உதவி திட்டம்

மனிதனின் இறுதிப்புகலிடம் ஆனமீகமே. ஆன்மிக உலகின் முதல்படி சமயப்பிணைப்பாகும்.இச்சமயத்துறையில் பாரதம வகிக்கும் பங்கு குறிப்பிடத்தக்கது. இந்து சமயத்தின் பெருமை நம் நாட்டில் மட்டுமன்றி, மேலைநாடுகளிலும் ஓங்கி வளர்ந்து வருகினறது. இதற்குச் சாட்சி அங்கு எழும்பி வரும நமது இந்து சமயக் கோயில்களே. இக்கோயில்கள் நமது சமயத்தின் பெருமையை மட்டுமின்றி நமது கலாசாரத் தூண்களாகவும் விளங்கு வருகின்றன. இதனை மனதிற்கொண்டே, தி. தி. தேவஸ்தானம் 'வெளிநாட்டில் கோயில்கள் கட்டுவதற்கு தி. தி. தேவஸதானத்தாரின் நிதி உதவி' எனும் திட்டம் ஒன்றினை துவக்கியுள்ளது.

### இத்திட்டத்தின் முக்கிய விவரங்கள் பின் வருமாறு

* வெளிநாட்டில் பதிவு செய்யப்பட்ட எந்த கோயில் குழுவும் இந் நிதிக்கு மனு செய்யலாம்.
* கோயில் கட்டுவதற்கு நிதிவேண்டுமானல், அக்கோயில் குழு அக் கோயிலுக்கான தகுந்த இடத்தை வாங்கியிருத்தல் வேண்டும்.
* கோயிலுக்கானத் திட்டங்கள், தேவையான திரு உருவச்சிலைகள், அக்குழுவின் நிதி நிலைமை போன்றவை அக்கோயில் குழு தருதல் வேணடும்.
* இத்திட்டத்தின் மேலாளர் தி. தி. தே. குழுவாகும். முதலில் தி. தி. தே. ரூபாய் ஒரு கோடியை ஒரு வங்கியில் இத்திட்டத்தின் சுற்று நிதியாக முதலீடு செய்யும். தேவையான போது, அவ்வப் போது பணம் முதலீடு செய்யப் படும.
* வெளிநாட்டில் இருக்கும் எந்த விதமான இந்து சமயக் குழுவும் கோயிலைக கட்டுவதற்கோ, பழுது பார்ககவோ ரூ. 15,00,000/– வரை நிதி கேட்கலாம்.
* இந்நிதி தெய்வீக திருவுருவச்சிலைகள், கல் வேலைப்பாடுகள் போன்ற வற்றிற்கும் பயன்படுத்தலாம்.
* கோயில் சம்பந்தப்பட்ட வரைப் படங்கள், திட்டங்கள் யாவும் ஹைதராபாத்திலுள்ள அறநிலையத் துறையின் ஸ்தபதியின் மூலம் பரிசீலிக்கப்படும்.
* கடனக வழங்கும் நிதியானது வட்டியின்றி வழங்கப்படும். இத் தொகை கோயில் பணி முடிந்த மூன்றாண்டுகளுக்குப்பிறகு 5ஆண்டு தவணைகளின் மூலம் திருப்பித் தரலாம்.
* இத்திட்டம் சம்பந்தப்பட்ட ஒழுங்கு விதிமுறைகள் யாவும் தி. தி. தேவஸ்தானத்தின் அதிகாரத் திற்கு உட்படும்.

முழு விவரங்களுக்கு: செயலாட்சித் தலைவர், திருமலை திருப்பதி தேவஸ தானம், திருப்பதி - 517501, ஆந்திர மாநிலம், இந்தியா எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளுதல் வேண்டும். ★

**சென்ற இதழ் தொடர்ச்சி......**

பூர்வ மீமாம்ஸாதர்சனம்—முதல் அத்யாயம்—மூன்றும் பாதம், மூன்றும் அதிகரணத்தில், "சிஷ்டர்களுடைய ஒழுக்கமெல்லாம் ப்ரமாணமே தான்" என்னும் விஷயம் ஸ்தாபிக்கப்படுகிறது. இதற்கேற்ப, "சிஷ்டர்களான பெரியோர்களே அத்துமீறி, பற்பல அதர்மங்களைச் செய்திருப்பதனால், அதை ப்ரமாணமாக ஏற்றுக்கொள்ளக்கூடாது" என்னும் "பூர்வபக்ஷம்" முதலில் எழுப்பப்படுகிறது. பிறகு தக்க ஆதாரங்களால் இது மறுத்துரைக்கப்படுகிறது.

இவர் அனுஷ்டித்திருக்கிறார். இந்தத் தவறுதல் இவரோடு போகவில்லை இராமனுங்கூட இப்படியே செய்திருக்கிறார்" என்பதாம்.

இது "பூர்வபக்ஷம்" என்பதை வாசகர்கள் நினைவில் கொள்ள வேணும். இது தெளிவாகவே உளது. அதனால் இதனை விரித்துரைப்பது அவசியமில்லை.

இதோ ஸித்தாந்தம் (இதற்கு மறுப்பு) காண்மின்!

रामभीष्मयोस्तु, स्नेह पितृभक्तिवशात् विद्यमान धर्मार्थदारयोरेव, साक्षादव्यवहितापत्य कृत पित्रानृण्ययोः यागसिद्धिः । हिरण्मय

# பீஷ்மரின் தனிப்பெருமை

"सदाचारेषु हि दृष्टो धर्मव्यतिक्रमः साहसञ्च महतां, प्रजापतीन्द्र वसिष्ठविश्वामित्र युधिष्ठिर कृष्णद्वैपायन भीष्म धृतराष्ट्र वासुदेवार्जुन प्रभृतीनां बहूनां मद्यतनानाञ्च"

என்பது அதிலுள்ள வாக்யம். பத்து பேர்களைக்குறிப்பிட்டு அவர் தர்ம விரோதமாக நடந்து கொண்டதைக் கூறுகிறார். இதில் பீஷ்மரும் இந்தப் பதின்மருள் ஒருவர். இங்கு பீஷ்மரைப் பற்றிய விஷயத்தை மட்டும் கூறுகிறோம். விருப்பமுள்ளவர்கள் மேற்படி நூலில் அனைத்தையும் படித்தறியலாம.

भीष्मस्य च सर्वाश्रम धर्म व्यतिरेकेणावस्थानम् ।

अपत्नीकस्य च रामवत् क्रतुप्रयोगः ।।

எனபது அங்குள்ள வாகயம இதன கருதது—

"பீஷ்மரும சாஸதிரங்களுககு விரோதமாக நடந்து கொண்டிருக்கிறார். 1. நாலு ஆச்ரமங்களில் ஒன்றிலும் சேராமல் 'அனாச்ரமீ'யாகவே இவர் இருந்தார் 2. பத்தினி (மனைவி) இல்லாத நிலையிலேயே (தனியாகவே) யாகங்கள் பலவற்றையும்

सीताकरणञ्च, लोकापवादभिया त्यक्त सीतागतानृशंस्याभावाशङ्का निवृत्त्यर्थम् ।

भीष्मस्य : —

भ्रातॄणा मेकजातानामेकश्चेत् पुत्रवान् भवेत् ।
सर्वे तेनैव पुत्रेण पुत्रिणो मनुरब्रवीत् ।।

इत्येवं विचित्रवीर्यं क्षेत्रज पुत्र लब्धपित्रनृणत्वः, केवल यज्ञार्थं पत्नीसंबंध आसीदिति अर्थापत्त्या अनुक्तमपि गम्यते ।

यो वा पिण्डं पितुः पाणौ विज्ञातेऽपि न दत्तवान् ।
शास्त्रार्थातिक्रमाद्भीतः यजेतैकाक्यसौ कथम् ।।

என்பன அங்குள்ள வாக்யங்கள்.

இவற்றின கருத்து :

"இராமன — பீஷ்மா, இவர்கள் மனைவியிலலாமல தனியாக யாகம பணணவிலலை. மனைவியுடனதான்—தமபதிகளாகவேதான — யாகம பணணினார்கள (சிற்றினப நுகர்ச்சிக்காக இல்லாமல்) தர்மானுஷ்டானத்துக்கு வேண்டிய மனைவி இருவருககுமுண்டு பித்ரு பக்தியினால் பீஷ்மரும் — (சீதையை விட்டுப் பிரிந்த பிறகு அவளிடமிருந்த) அளவு கடந்த பாசத்தால் இராமனும் சிற்றின்பத்தில் நாட்டங் கொள்ளவில்லை, பித்ருக்களின் கடன் இவர்களுக்குத் தீர்ந்து விட்டது. இராமனுக்கு ஸாக்ஷாத்தாகவே பிள்ளைப்பேறு ஏற்பட்டது. பீஷ்மருக்கு அவ்வாறில்லை. அவரது சகோதரனுடைய பிள்ளையே இவருக்கும் பிள்ளை. அப்படியானால் இராமன் யாக காலத்தில் மனைவிக்குப் பதிலாகப் பொன்னாலான சீதையின் பிம்பத்தைப் பக்கத்தில் வைத்துக் கொண்டதாகக் கூறப்படுவது எங்ஙனே? என்னில்; அதற்குக் காரணம் வேறொன்று. "சீதையைக் காட்டுக்கனுப்பிவிட்டு, சிறிதுகூட அனுதாபமில்லாமல் இரக்கமற்றவராக இருக்கிறார்" என்று நாட்டு மக்கள் பழி தூற்றுமலிருப்பதற்காகவே அப்படிச் செய்தார்.

பீஷ்மரோவெனில்; "ஒரு தந்தையின் பிள்ளைகளுள், யாராவது ஒருவருக்குப் புத்திர ஸந்தானமுண்டாயின், அதனால் பிள்ளையில்லாத மற்றவர்களும் புத்திரனுடையவர்களாகி விடலாம்" என்னும் மனு தர்மசாஸ்திரப்படி, தனது தம்பியான விசித்ரவீர்யனுடைய க்ஷேத்ரஜ புத்ரர்களாலேயே தனது பித்ருக் கடனைத் தீர்த்துக்கொண்டு, தர்மானுஷ்டானத்துக்காகவே (சுகபோகத்திற்காகவல்லாமல) மணந்து கொள்ளப்பட்ட மனைவியுடனேதான் யாகங்களைப் பண்ணினார் இப்படிக் கூறுவதற்கு ஆதாரம் ஸ்பஷ்டமாய் ஒன்றுமில்லையே எனறு கலங்க வேண்டாம் "அர்த்தாபத்தி"யேதான இதற்குப் ப்ரமாணம். பீஷ்மருடைய தநதை இறந்த பிறகு அவருக்கு ச்ராத்தம பண்ணும்போது, பூமியில் தர்பத்தின் மேல், பிதாவின் பேரைச் சொல்லி பிண்டத்தை வைக்கும்போது, ஸாக்ஷாத் சந்தனு மகாராஜனுடைய கையே அங்குத் தோன்றி விடடது. அதிலேயே பிண்

நாவலபாக்கம ஸ்ரீ தேவநாதாச்சாரியார்,
திருப்பதி.

டத்தை வைப்பது எவ்வளவு சிறந்த நல்வாய்ப்பு. பீஷ்மர் அப்படிச் செய்ய வில்லை. 'பூமியில தர்பத்தைப் போட்டு அதன் மேல் பிண்டத்தை வைக்கவேணும் - என்றுதானே சாஸ்திரம் சொல்லுகிறது? ப்ரதயக்ஷமான கையில் வைக்கச் சொல்ல வில்லையே! நான் சாஸ்திரம சொல்லுகிறபடியேதான செய்வேன் மீறி நடகக மாட்டேன. என் தந்தையாா அருள் கூர்ந்து, இந்த ப்ரத்யக்ஷமான கையைத் திரும்ப வாங்கி — வெறும் தரையில் பிணடத்தை வைககுமாறு வழிவிட வேணடும்' என்று வேண்டிக்கொண்டு எடுத்த பிண்டத்தைத் தன் கையிலேயே வைததுக்கொண்டு காத்திருந்தார். பிறகு அந்தக கை மறைநதது. வெறும் தரை மட்டும் தெரிநதது அதில் பிண்டத்தை வைத்தார் பீஷ்மர்

இப்படி அறநெறியில் துளி கூட வழுவாத-மஹாதார்மிகரான பீஷ்மர் மனைவியில்லாமல் யாகங்களைப் பண்ணுவாரா?'' என்பதாம்.

இப்படிக் கருத்தை மட்டும் தந்தால் விளங்காது. அதனால் இதைச் சிறிது விளக்கிக் கூறுவோம்.

ஏகபத்னீ வ்ரதத்துக்கு ப்ரபஞ்சத்தில் ஒரே ஒரு உதாரணம இராமன்தான். இவருக்கு ஸீதையிடம் இருந்த அன்பின் தன்மையை வார்த்தைகளால் சொல்ல முடியாது இவரிடம் சீதைக்கிருந்த அனபும் இப்படிப்பட்டதே விஸ்தாரமானவால்மீகி இராமாயணத்தில் ஸீதாகல்யாணமொனறுதான வெகு அழகாகக கூறப்பட்டுள்ளது. சீதையைத் தவிர வேறு ராஜகுமாரிகளை இராமன் மணந்து கொண்டதாக எந்த இடத்திலும் கூறப்பட வில்லை. இவ்விஷயம் நாடு நகரமும் நன்கறிந்ததேயாம். இராமன் சீதையைத் தவிர வேறொரு மனைவியை மணந்துகொண்டதாக யாரும் கனவிலுங்கூட எண்ணியதில்லை. அப்படி எண்ணுவதும் — சொல்லுவதும் கூட அருவருக்கத்தக்கதாகவே இருக்கிறது மீமாம்ஸாவார்த்திககாரரான குமாரிலபட்டர் ஒருவர் தான் இப்படி ஒரு குரலை எழுப்பியுள்ளார். இவர் மட்டும் ஏன இப்படித துணிந்து கூறினார்?

அவர் தனது சுயநலத்தைக் கருதி இவ்வாறு கூறவில்லை. இது சாஸ்திர விசாரம். உளளதை உள்ள படியே தயககமில்லாமல் சொலலியாக வேணும மூடி மறைக்க முடியாது யார் யார் என்ன என்ன நினைத்தாலும — நிநதித்தாலும — அதையெலலாம் லக்ஷ்யம் பண்ண முடியாத நிலை

சீதையை வால்மீகி முனிவரின காட்டில் கொண்டுபோய விட்டு விட்டு இராஜ்ய கார்யங்களைக கவனித்துக் கொண்டிருந்தாா இராம பிரான. அற்புதமான ''இராம ராஜ்யம்'' நடந்து வருகிறது. இந்நிலையில் நாட்டு மக்களின் நல்வாழ்வுக்காகப் பல யாகங்களையும் பண்ணினார் இராமன். அச்வமேதயாகங் கூட நடந்தது. இதையும் வால்மீகி முனிவரேதான் சொல்லி வைத்திருக்கிறார். யாகம் என்பது மனைவியுடன இருப்பவனே பண்ணக் கூடியது. தர்மத்தின் நுட்பத்தை நன்கறிந்து, தவறாமல் நடப்பவர் இராம பிரான. "रामो विग्रहवान् धर्मः" என்பது இராமாயண வசனம். தர்மமே ஒரு வடிவமெடுத்துக்கொண்டு இராமனாகக் காட்சியளிக்கிறது என்பது கருதது. இபபடிபபட்ட பரம தார்மிகன மனைவியிலலாமல் யாகம பண்ணுவானா? அது மிகப பெரிய அதாமமாயிற்றே! முறைப்படி மணந்த மனைவியுடனதான் இநத தர்மாத்மா யாகஙகளைப் பணணினார் என்று துணிநது கூறுவதில் தவறென்ன? யாகங்களைப் பண்ணவேண்டிய அவசியம் ஏற்பட்ட பிறகு அவற்றை முறை தவறாகப் பண்ணலாமா? அப்படிப் பண்ணினாலும் கோரின பயன் கிட்டுமா? சீதையுடனிருந்தவரையில் அவளை ஸஹ தர்ம சாரிணியாகக்கொண்டு யாகங்களைப் பண்ணினார். அவளைப் பிரிந்த பின்னர் யாகங்களைக் கைவிடவில்லை. தொடர்ந்து பண்ணிக்கொண்டே தானிருந்தார் தர்ம காரியங்களில் மட்டுமே துணையாக இருக்கும் உறுதியான மனம் படைத்த வேறு மனைவி அந்தக் காலத்தில் கிடைப்பது அசாத்தியமில்லை 'சீதா தேவியை விட்டுப் பிரிந்த பிறகும் இராமன் யாகங்களைப் பண்ணினார்'' எனறு சொன்ன வால்மீகி முனிவா, தாமானுஷ்டானத்திற்கு மட்டுமே துணைவியாக ஒரு மனைவியை மணநது கொண்டார் என்பதையும் சேர்த்துச் சொன்னதாகவே கொள்ள வேணும். இப்படிக் காதல் இல்லாத கலியாணமுமுணடா? என்று வியப்புடன் கேட்பார்கள் இக்காலத்து மககள். இகலோக சுகங்களை தர்மத்துக்காகக் கைவிடுவது இவர்களுக்கு அடியோடு தெரியாது. தாமத்தைப் புறக்கணித்து இகலோக ஸுகங்களைத் தேடுவதுதான் இவர்களுக்குத் தெரியும். பழங்காலம் இப்படிப்பட்டதில்லை. எத்தனையோ உத்தமிகள் தனது கணவன் இறந்தபோது உடன்கட்டை ஏறினதை நாம் அறிவோம். இது தர்மத்தைத் தேடுவதற்காகவே தான. இராமன் — பீஷ்மர்—போன்ற மகான்களுடன் ஸக தர்ம சாரணியாக இருந்து யாகங்களில் கலந்து கொண்டு இமயம் போன்ற புண்ணியத்தைச சேமிப்பது சாதாரணமாகக கிடைககககூடிய பாக்கியமா? அறபமான சுகபோகம இதற்கெதிரே நிறகுமா? ஒரு லக்ஷாதிபதி அலலது கோடீசவரனை கிழவனைப் பணத்திறகாக இளம பெணகளும் மணபபர் இககாலத்தில். தர்மத்திற்காக இதைப் பழங்காலத்தவர் செய்தனர்

இனி இராமன சீதாதேவியைக் காட்டுக்கனுப்பினபிறகு யாகம் பண்ணினதற்காதாரமானவற்றை எடுத்துக் காட்டுவோம்.

ஸ்ரீமத் இராமாயணம் உத்தரகாண்டம் — எண்பத்தொன்பதாவது ஸர்கம் :—

இந்த ச்லோகத்தின் உள்ளர்த்தம் குமாரிலபட்டரால் முன்னமே விவரிக்கப்பட்டது.

न सीतायाः परां भार्यां वव्रे स रघुनन्दन ।
यज्ञे यज्ञे च पत्न्यर्थं जानकी काञ्चनी भवत् ॥ ४ ॥

கருத்து இராமன ஸீதையைத் தவிர வேறு மனைவியை ஏற்கவில்லை. ஒவ்வொரு யாகத்திலும பத்நியாக, சீதையின் பிம்பம பொன்னால் வடிக்கப்பட்டு அருகில் வைத்துக் கொள்ளப்பட்டது.

दश वर्षसहस्राणि वाजिमेधमुपाकरोत् ।
वाजपेयान्दशगुणां स्तथा बहु सुवर्णकान् ॥ ५ ॥

கருத்து : பத்தாயிரம் ஆண்டுகள் அச்வமேத யாகங்களைப் பண்ணினார். அதற்கும் மேல் பதின்மடங்கு வாஜபேய யாகங்களை, ஏராளமான பொற்குவையை தக்ஷிணையாக வழங்கிப் பண்ணினார்.

अग्निष्टोमातिरात्राभ्यां गोसवैश्च महाधनैः ।
ईजे क्रतुभिरन्यैश्च स श्रीमानाप्तदक्षिणैः ॥ ६ ॥

கருத்து : அக்நிஷ்டோமயாகம், அதிராத்ரயாகம், கோஸத்ரம் - மற்றும் பல யாகங்கள் — இவற்றைப் பெரும்பொருளை தக்ஷிணையாகக் கொடுத்துப பண்ணினார்

இதே விஷயம் பவபூதி மஹாகவியால இயற்றப்பட்ட உலகப்ரசித்தி பெறற'உததர ராமசரிதத்திலும வருகிறது. அதையும எழுதிவிட்டு மேலே செல்வோம.

உத்தரராமசரிதம, இரண்டாவது அங்கம் சீதையை இராமன் காட்டில் கொண்டுவிட்ட விஷயம தண்டகாரண்யத்தில் உளளவர்களுக்கு எட்டியபோது அங்குள்ளவர்களின் சம்பாஷணை :—

...... ....................

वासन्ती – अयि! स राजा किमाचारस्संप्रति?

*(அநத அரசன் இப்போது என்ன செய்கிறான்?)*

आत्रेयी — तेन राज्ञा क्रतु रश्वमेधः प्रक्रान्त ।

*(அந்த அரசனால் அச்வமேதயாகம் ஆரம்பிககப்பட்டுள்ளது)*

वासन्ती — हा धिक् ! परिणोतमपि?

*(ஐயையோ! கல்யாணமும பணணிககொணடாயிற்றா?)*

आत्रेयी — शान्तं पापम् ।

*(பாபம் சாநதமாகட்டும் —''வேறு மணம செயயவிலலை''. எனபது இசசொலலால விளககபபடுகிறது).*

वासन्ती — का तर्हि यज्ञे सहधर्मचारिणी ?

*(அப்படியானால் யாகத்தில் ஸஹதர்மசாரிணீ யாா?)*

आत्रेयी — हिरण्मयी सीताप्रतिकृतिः ।

*(பொன மயமான சீதையின் பிம்பம்தான்)*

वासन्ती — हन्तभोः !
वज्रादपि कठोराणि मृदूनि कुसुमादपि ।
लोकोत्तराणां चेतांसि को हि विज्ञातुमर्हति ॥

*(வஜ்ரததைக் காட்டிலும் கடினம. பூவைக் காட்டிலும் மென்மையானது. உலகிற் சிறந்தவர்களுடைய மனம (சந்தர்பததிறகேறப) இப்படியெல்லாம மாறும். இதை யாரே அறியவல்லார்?)*

இவவாறாக வனதேவதைகளின சம்பாஷணை செலகிறது வாலமீகி ராமாயணததில சொலலபபடட விஷயததையேதான பவபூதி மகாகவியும சொல்கிறார். அதாவது — இராமன சீதையைத தவிர வேறு மனைவியரை மணநது கொள்ளவில்லை — யாகங்களை யெலலாம, ஸீதையின் பொன விக்ரஹத்தையே அருகில வைத்துககொண்டு பண்ணினார் — எனபதே.

இங்கு வியாக்யானகாரர் எழுதுவதைப் பார்பபோம்.

"यस्य भार्या विदूरस्था पतिता व्याधितापि वा।
अनिच्छु प्रतिकूला वा तस्या. प्रतिनिधी क्रिया ॥"

इति वचनं परिणयान्तराशक्तविषयम्, निरवकाशक्रिया विषयञ्च । अश्वमेधादिस्तु सावकाशः, रामश्च परिणयान्तराशक्त ।"

எனபது அங்குள்ள வாகயம்.

இதன கருத்து —

''எவனுடைய மனைவி வெகு தூர தேசத்தில இருககிறாளோ—அலலது—பதிதையாகிவிடடாளோ — அலலது—நோயவாய்ப்பட்டாளோ — அலலது—கூட இருநது தர்மகாரியங்களைச் செய்வதில் விருப்பமிலலாதவளாக இருக்கிறாளோ — அல்லது — நோவிரோதமானவளாக இருக்கிறாளோ—அவளுடைய கணவன், பிரதிநிதியை (தனது மனைவியின் — பிமபத்தை) வைததுககொண்டு யாகம் முதலிய காாயங்களைப் பண்ணலாம''. என்னும் சாஸ்திர வசனம், இராமனுக்கு ஒவ்வாது. இப்படிப்பட்டவன் வேறு மனைவியை மணந்து கொணடு அவளுடன் சேர்ந்து யாகங்களைப் பண்ண வேணும். அவ்வாறு செய்வதற்கு சக்தியற்றவன்தான்

---

தெரிந்து கொள்ளுங்கள்:

## நீராடல்

சிவராத்திரி, மாதப் பிறப்பு, இறப்பு, கிரஹணம இவை நேர்ந்தாலனறி நள்ளிரவில நீராடக் கூடாது

## ருத்ராட்சத்தின் பெருமை

பூசையில ருத்திராடசம அணிந்து தான் பூஜை செய்ய வேண்டும். லைசென்சு இல்லாதவர்கள் கார ஓட்டக் கூடாது அல்லவா? அது போல் உருத்திராட்சம் அணியாமல் பூஜை செயவது நலம் அனறு.

தகவல்: திருமதி. கமலா மாரியபபன்.

---

ப்ரதிநிதியாக பிம்பத்தை வைத்துக் கொண்டு யாகங்களைப் பண்ணலாம். இராமனோவெனில் வேறு மனைவியை மணந்துகொள்ளும் சக்தியுள்ளவர் அதனால் இவர் சீதையின் பிம்பத்தைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு யாகம் செய்வது அனுமதிக்கப்பட மாட்டாது. அதில் மற்றொரு விசேஷம் — அவசியமாகப்பண்ணியே தீர வேண்டிய நித்ய நைமித்திகமான கார்யங்களுக்குத்தான் ''ப்ரதிநிதி''யை வைத்துக்கொண்டு அனுஷ்டிக்கும வழி அனுமதிக்கப்பட்டுள்ளது இராமன் அச்வமேத யாகத்தைப் பண்ணினார் இது அதயாவச்யகமாகப் பண்ணியே தீரவேண்டிய தொன்றன்று. சக்தியுள்ளவன் பண்ணலாம். இல்லாதவன் பண்ணாமலே இருந்து விடலாம். இந்த வழியிலும் இராமனுக்குச் சீதையின் ப்ரதிமையைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு அச்வமேத யாகம் பண்ண அவகாசமில்லை.'' என்பதாம். க்ஷத்ரியர்களுள் மகாவீரனை ஒருவன், உலகில் தனக்கு இணையான வீரக்ஷத்ரியன் எவனுமில்லை என்பதை நிருபித்துக் காட்டுவதற்காகவே அச்வமேதயாகம் பண்ணுவான். அப்படியில்லாதவன் இதைப் பண்ணாமலே இருக்கலாம். அதில் தவறொன்றுமில்லை.

"अश्वमेध इति नाम विश्वविजयिनां क्षत्रियाणां ऊर्जस्वलः सर्वक्षत्रपरिभावी महानुत्कर्षनिकषः"

(உத்தரராமசரிதம நாலாவது அங்கம)

''அச்மேதம் என்பது, உலகம முழுவதையும் வென்றவர்களான க்ஷத்ரியர்கள்தான பண்ணககூடியது இதைப் பண்ணுகிற க்ஷத்ரியன், ''தானே நிகரற்ற மகாவீரன்'' என்று நாடெங்கும் பறையடித்து, ஏனைய க்ஷத்ரியர்களையெல்லாம் அவமானப்படுத்துகிறான். வீர க்ஷத்ரியர்களின் பராக்ரமத்திற்கு உரைகல் போன்ற இநத யாகம் மிகவும் ப்ரபலமானது'' என்பது கருத்து.

இராமனுடைய அச்வமேதக குதிரை வால்மீகி முனிவருடைய ஆச்ரமத்தில் வந்தது. அதைப பார்த்த உடனே குசலவர்களுள இளையவனை லவன் அடையாளம் தெரிநதுகொண்டு, அவமானம் தாஙகாமல் அதைப் பிடித்துக் கட்டிப் போட்டுவிட்டு, அதனருகில், மாபெரும போரை எதிர்பார்த்து, வில்லும் கையுமாக நின்றான். யாகக் குதிரையைக் காப்பதற்காக இராமனது சேனைத் தலைவர்கள் ஓடி வந்து அவனைத் தாக்கினார்கள் பெரும் போர் நடந்தது இது கதையின் போக்கு. அப்போது லவன் சொன்ன வார்த்தையே மேலே காட்டப்பட்டது.

தனது மனைவியின் ப்ரதிமையை அவளுக்குப் பதிலாகப் பக்கத்தில் வைத்துக்கொண்டு இதுபோன்ற பெரிய யாகங்களைப் பண்ணுவதற்கான தகுதி இராமனுக்கில்லை என்பதை இங்கு வியாக்யானகாரர் ஆதாரத்துடன் தெளிவுபடுத்தி விட்டார்.

இதில் மற்றொரு விசேஷம். பத்தினியுள்ளவனதான் எந்த யாகத்தையும் பண்ணலாம் எனபது பொதுவான விதி அசவமேத யாகதைதப பண்ணுகிறவனுககு மூனறு மனைவிகள் இருக்க வேண்டும் ஒரு மனைவி மட்டும் உள்ளவன், உலகையெல்லாம் வெற்றிகண்ட க்ஷத்ரியனாக இருந்தாலுங்கூட அச்வமேத யாகம் பண்ண முடியாது. பட்டாபிஷேகமானவுடன சீதையுடன் இருந்தபோதும் இராமன் அச்வமேத யாகம் பண்ணியிருககிறார். அதனால் அபபோதுஙகூட சீதையைத் தவிர மறறுமிரண்டு மனைவியா இராமனுக்கிருந்திருககிறார்கள எனபது ஊர்ஜிதமாகிறது. சீதையைப் பிரிநத நிலையிலும் அச்வமேதயாகம பணணினா இப்போது, ஏற்கனவே இருந்த இரணடு ''தர்மபத்தினி'' களோடு மூனறாவதாக மற்றொருத்தியையும் மணந்துகொண்டுதான் அச்வமேத யாகத்தைப் பண்ணியிருக்கிறார். சீதையின் பொன் பரதிமையை அருகில் யாக காலங்களில் வைத்திருந்தது, அவளிடம் அவருக கிருந்த அளவுகடந்த பாசத்தினாலும் அவளிடம் இரக்கமற்றவனாகத்தான் நடந்துகொள்ளவில்லை என்பதை நாட்டாருக்கு நிருபித்துக்காட்டுவதன்மூலம் லோகாபவாதத்தைத் தவிர்த்துக்கொள்ளும் நோக்கத்தினாலும்தான் என்பது உறுதிப்படுகின்றது. இதையே மீமாம்ஸாவார்த்திககாரரான குமாரிலபட்டர் சொன்னார். அச்வமேதயாகத்தில் யஜமானனாக இருக்கும் க்ஷத்ரியனுக்கு இருககவேண்டிய மூன்று மனைவிகளுக்கும் யாகசாலையினுள் மூன்று பெயர்கள உண்டு. அவரவர்களது தாயதநதையர் இட்ட பெயர் யாக சாலையில் வழஙகாது. முதலாமவளுககு ''மகிஷீ'' (महिषी) என்று பெயா. இரண்டாமவளுக்கு ''வாவாதா'' (वावाता) எனறு பெயர். மூனறாமவளுக்குப் ''பரிவ்ருக்தீ (परिवृक्ती) எனறு பெயர். இம்மூவருக்குள தாரதம்யமுமுண்டு. இந்தப் பெயர்களே அதையும உணர்த்தவல்லவை.

(தொடரும்)

ஸப்தகிரியில் வெளியிடப்படும் கதை, கட்டுரைகள், கவிதைகள் ஆகியவற்றில் காணப்படும் கருத்துக்கள் அவ்வவ் எழுத்தாளர் பெருமக்களின் தனிப்பட்ட கருத்துக்களேயாம். அவற்றிற்கு 'ஸப்தகிரி' எவ்வகையிலும் பொறுப்பேற்காது

— ஆர்.

இராவண வதம் முடிநது, விபீஷணனுக்கு முடி சூட்டியது முதலான செய்திகளைச் சீதையிடம் கூறி அவள் கருத்தை அறிநது வா என்று இராமன் அநுமனை அனுப்பினன் அவனும் பிராட்டி இருப்பிடப் சென்றன. வந்த செய்தியைச் சொல்லாமல் இராம நாமத்தைச சொன்ன வண்ணமே ஆனந்தக்கூத்து ஆடினன். பிறகு பிராட்டியைப் பார்த்துக் கூப்பியகையனுய்,

# அக்கினிப் பரிட்சை

> ''ஏழை சோபனம் ஏந்திழை சோபமை
> வாழி சோபனம மங்கல சோபனம்
> ஆழியான அரககனை ஆரியச்
> ஆழியானே துகைத்தது சோபனம்''

என்று நடநத சமபவத்தைத் தெரிவித்தான். கேட்ட பிராட்டி பூரிதது போனள. மகிழ்ச்சிப்பெருக்கால் பேச வாயெழவில்லே. ''களித்த இன் களி களனினில் காட்டுமால்'' என்கிறா கமபர் மது அருந்தியவன் மயஙகி இருப்பது போல மகிழச சிப் பெருககும மயக்கத்தைக்கொடுககும. பேச வாய வராது, ஒனறும் தோன்ருது. பிராட்டியின் மௌனத்தைக் கணட அனுமன் ''தாயே' தங்கள் மௌனம எனககு அச்சததைத் தருகிறது. நான சொனனவை பொய் என்று கருதுகிறீர்களா?'' என்று தயக்கத்தோடு கேட்டான்

> ''யாது இதறகு ஒனறு இயமபுவல
> என்பது
> மீதுயாந்த உவகையின விம்மலோ
> தூது பொய்க்கும என்றோ?
> எனச் சொல்லினன
> நீதி விததகன, நங்கை
> நிகழத்தினுள் ''

கேட்ட அனுமனுக்கு ''அப்பா ஆஞ்சநேய! நீ சொன்ன இந்த மங்கலச் செய்தியைக் கேட்டு மெய் மறந்து போனேன். என்ன சொல்வது என்று தெரியாமல் திகைக்கிறேன்; அவ் வளவே'' என்ருள் பிராட்டி.

> மேககு நீஙகிய வௌளா உவகையால்
> ஏக்கம உறறு ஒனறு இயமபுவது
> யாதென
> நோக்கி நோக்கி அரிது என
> நொந்துளேன்
> பாக்கியம பெரும் பித்துமபயககுமோ?

அளவு கடந்த மகிழ்ச்சியினலே ஆசை மிகுந்து, என்ன சொல்வது என்று எண்ணி எண்ணிச் சோர்ந்து போயிருக்கிறேன நல்லதும கூடச் சில சமயம தொல்லையைத தரும் போல இருககிறதே; ஆதலால், ஆஞ்சநேய! மௌனத்தைக் கொணடு என்னைத தவருக நினையாதே இத்தகைய சுபச் செய்தியைச் சொன்ன உனக்கு தலையல்லால் கைமாறு இலேன்'' என்கிருள் பிராட்டி. பிறகு அனுமன தேவியைப் பார்த்து ''தாயே! எனக்கு ஒரு வரம் அருள வேணடும்'' எனகிருன். ''வரமா? உனக்கா? உததம பிரமசாரியான உனக்கும் ஒன்று தேவையா?'' என்று வியப் படைந்தவளாய், ''உன் தேவையைத் தெரிவி'' என்கிருள். ''அன்னையே! முன்பு நான் இங்கு வந்த போது இந்த அரக்கியர்கள் தங்களைப் படுத்திய பாட்டைக் கண்டு மனமநொந்து போனேன். இன்று அவர்களைக் கையாலும் காலாலும் தேய்த்து மாய்த்து விடுகிறேன். அதற்குத் தங்கள் அனுமதி வேண்டும்' என்று குறையிரந்து நின்ருன் அனுமன். இதைக்கேட்ட பிராட்டி அதிர்ச்சியடைந்து போனள். ''ஆஞ்சநேய! உலகுக்கு ஒரு உத்தமன் - இரக்கம் நிறைந்தவன் என்றெல்லாம் உனனை எண்ணியிருந்தேன். அந்த எண்ணத்தை மண்ணுக்கி விட்டாய். உலகில் தவறு செய்யாதவர்கள் யார்? என்ன தீமை இவர் இழைத்தார்? அவன் சொல்லின் அல்லது, தூய்மையோய்! எஜமானன் சொல்படி இவர்கள நடநதார்கள். இப்பொழுது அவன போய்விட்டான்! அதனுல் நமக்கு என்ன நேருமோ என்று அஞ்சி நடுங்கிக் கொண்டு இருக்கிருர்கள். இந்த நிலையில் நீ அவர்களுக்குத் தைரியம் கூறி, உங்கள் எஜமானனைப் போல அல்ல எங்கள் சுவாமி; உங்களுக்கு நல்லதையே செய்வோம் பயப்படாதீர்கள்' என்று தேறுதல் அல்லவா சொல்ல வேண்டும் '' என்ருள் பிராட்டி இதைக் கேட்ட அனுமன் பிராட்டியின் திருவடிகளில் விழுந்து வணங்கி, ''தாயே! சுவாமி இராமர் கூட, அபயம் என வந்தவனைத்தான் காப்பாற்றுகிருர்; இங்கே இந்த அரக்கியர்கள் உங்களை திரும்பிக் கூடப் பாாக்கவில்லை, அவர்களை இரட்சிப்பது என்று சங்கல்பம செய்துகொண்டு விட்டீர்களே!'' என்று கணணீர் வரத் தோத்தரிததான். இந்த இடத்திலே பிராட டியின் திருவாய்மொழியாக அருமையான சுலோகம ஒன்று வான்மீகத்தில் வருகிறது ''பாபாநாம் வாசுபாநாம்வாவயார்ஹாணும் ப்லவங்கம

தேவானுரர் பெ. இராமாநுஜன்

காாயம் கருணமார்யேண நகச்சிந்ந அபராத்யதி'' இதைத் தாயாரின் அபய ப்ரதான சுலோகம என்று சொல்வர்.

ஆஞ்சநேய! உன் விருப்பப்படி இந்த ராட்சிகள் கொல்வதறகுரிய பாவிகளாயிருந்தாலும, அலலது என் கருத்துப்படி நல்லவர்களாக இருந்தாலும் இப்போது உள்ள நிலையில் கருணையே காட்ட வேணடும. உலகில் குற்றம் இல்லாதவர் யாா?'' என்கிருள் தயாசொரூபியானதாயார் இராமன் சுக்கிரீவன் முதலானவர்கள் கருத்துக்கு மாருக வீடணனை ஏற்றுக்கொணட போது ''தோஷோ யகூயபி தஸ்ய ஸ்யாத்'' இவனிடத்

தில் தோஷம் இருந்தாலும ஏறறுக் கொள்ள வேணும, ஏறறுக கொள கிறேன் என்கிறுன் பாபிகளே நாமே முன் சென்று இரட்சிக்க வேணடும் எனற இராமபிரான கொள்கையைப பிராட்டியும் இங்குப் பின்பற்றுகிறுள் "தாயே! சுவாமியிடததில் நான என்ன சொல்வது?" எனறு கேட்டான் அனுமன். "விரைவில் சுவாமியைப் பார்க்க வேணடும்" என்றுள் பிராட்டி. அனுமன் இராமனே அடைநது தேவியின் கருத்தைக் கூறிஞன் பிறகு இராமன வீடணனே அழைத்து "நீ பட்டாடை அணிமணிகளோடு சீதை இருப்பிடம் சென்று அவறறை அணிந்து சர்வாங்க சுநதரியாக அழகு படுத்திக கொளளச செயது பல்லக்கிலே அழைத்து வா" என்று நியமித்தான் அவனும் பிராட்டியிடம் சென்று "சுவாமி தங்களே அழைத்து வருமாறு ஆக்ஞாபிதது இருக்கிறுர்" எனறுன. பிராட்டி புறபபடத் தொடஙகிஞள் ஆனல் வீடணன் இடைமறித்து "அமமா பட்டாடை உடுத்தி, அணிமணிகள் பூணடு மலர்மாலே சூடி அழகு செயது கொணடு இநதப பல்லக்கில் அமர வேணடும" எனறுன பிராட்டி ஒப்பவில்லே, இப்பொழுது உள்ள கோலததிலதான் வருவேன் என்றுள். "எனது கருத்து அலல, தாயே! சுவாமியின் ஆக்ஞை" என்ருன் வீடணன். வேணடா வெறுப்பாய்த் தனனே அலங்கரித்துக் கொணடு பல்லக்கில் அமர்ந்தாள். கணவனேக் காணப்போகிறேம் எனற கட்டுக்கடங்கா ஆவல பிராட்டிககு. ஆனல் அசோக வனத்தில இருநத கோலததைப பாாககமறுதத வேதனே ஒரு பக்கம். இநத நிலேயில் "பசிலே வண்ணமும பவள வாயுமாய்க் கைச்சிலே ஏநதிய கமலக் கணணனே"க் கணடு வணங்கி நின்றுள். கருணமூர்த்தியான இராமன் ருத்திர மூர்த்தியாகி விட்டான. படத்தைத் தூக்கிச் சீறுகினற பாம்பைப்போலப் பிராட்டியைப் பார்தது கொடூரமான சில சொற்களேச் சொல்கின்ருன். "வணங்கிய மயிலினேக கறபின் வாழ்வினேப பணமணிளர் அரவு என எழுநது பார்ப்புறு" என்கிறுர் கம்பர். மேலும பிராட்டியிடம் பறிகொடுதத நெஞசுடையவராய்,

"கறபினுக்கு அரசினேப பெணமைக்
காபபினே
பொறபினுக்கு அழகினேப புகழின
வாழககையை
தறபிரிந்து அருளபுரி தருமம
போலியை
அறபினத் தலேவனும அமைய
நோக்கிஞன்"
"காணியைப பெணமைககு எலலாம
கறபினுககு அணியை பொறபின
ஆணியை அமிழதின வந்த அமுதினே
அறத்தின தாயை"

எனறு புகழ்நது போறறுகிறுா. இரக்கமே உருவான பிராட்டியை ஏறஇறஙகபபார்தத இராமன "கடலில் அணே கட்டி இலங்கை அடைநது இராவணனேக கொனறது உன்னே மீட்பதறகாக அலல; மனேவியைப பறி கொடுத்த, கையாலஆகாதவன் எனற பழியைப போககுவதற்கே ஆகும. நீயோ கணவனேப் பிரிய நேரநததே எனற கவலே சிறிதும இல்லாமல் ஒழுக்கம கெட்டுப் பகைவனுடைய ஆதரவில் அறுசுவை உணவை ஆர உணடனே. கறபுடையவளாக இருநதால உயிரை விட்டு இருக்கவேணடும. கொஞசமும அச்சம இல்லாமல் இங்குவர உனககு எபபடித துணிவு வநதது? நான ஏற்றுக கொள்வேன எனறு? ஊனும மதுவும் வேணடிய அளவு சுவைதது இருப்பாய கணவனேப பிரிநத கறபுடைப் பெணடிா மனம விருமபியபடி புலனகளே ஓடவிடாமல தடுதது தலேமயிாகத்தைக்கதறையாகச்சடை பிடிககும அளவு துறவியர் போல் வாழ்வர். ஒழுக்கம சிதையுமேல அப்பொழுதே உயிரைத் துறந்து விடுவர். மண்ணில் தோன்றிய புழுவைப போல நீயும மண்ணில தோன்றியவள் தானே; அதற்கு ஏறறபடி தான அறிவும் நடத்தையும இருக்கும்" என்று இன்ன வகையில் கசப்பான சொற்களே வரம்பு கடந்து பேசுகிறுன். வானமீகத்திலே இராமன பேச்சாக வருபவை மிகவும் கொடுமையாக இருக்கின்றன. 'சீதே! திவயரூபம் அமைநது அழகியவளாய இருக்கிற நீ வேறு கதியில்லாமல இராவணன அகததிலே தகையுணடு இருக்கையில் அவன இததகையள ஆன உனனேப் பார்ததுக் கொணடே வெறுமனே இருப்பானு? இருக்கமாட்டான. இததனே காலம இராவணனேடு இருநது நழுவிவநதனே. காம விகாரம உற்ற அவனுடைய துஷ்டப் பார்வைககு உடபட்டு இருநதனே" என்று இவ்வாறு மேலும பல சொல்கிறுன. —'பரதன, லக்ஷமணன் சுகரீவன, விபீஷணன இவாகள எல்லாம நமக்கு வேணடியவர்கள. இவாகளில யாராவது ஒருவருடைய ஆதரவில நீ இருககலாம நான உனககு இறுதியாகச சொல்கிற பேசசு இதுதான்' என்ற இராமனின நஞசு கலநத சொறகளே பிராட்டி எவ்வாறு ஜீரணித்துக கொணடாளோ தெரியவிலலே. கணணீா ஆறுய்ப் பெருக தரையைப் பாாதத வணணமே "எனது நிலேயை ஆஞசநேயன தஙகளிடம் கூறி இருப்பானே, அதை அறிநது வைததுமா இப்படிசசோதிக கிறீர்கள? எனது உணமை நிலேயை உஙகளுககு இனி நான எவவாறு காணபிகக முடியும? மாசுபட்ட இநத உடலே மாய்த்துக கொள்வதைத் தவிர வேறு வழி இல்லே" எனறு கூறி, அருகில் இந்த உரையாடலே எலலாம கேடடு சோகமே உருவாக நினறு கொணடு இருககும இளேய பெருமாளேப பாாத்து தீ மூட்டும்படி சொல்கிறுள். கேடட இலக்குவன செய்வது அறியாது திகைத்து இராமனேப பாாககிறுன. "சீதை விருமபிய வணணமே செய்" எனறு கணணுல் அறிவிககிறுன் இராமன.

உளம சோாந்து மெய் சோாந்து கணணீர் வரத தீயை மூட்டிஞன் இலக்குவன். பிராடடி தீயின் அருகே சென்றுள. தரும தேவதை நடுங்க "ஐயோ இது என்ன கொடுமை!"

என்று கூற அனைவரும் கண்ணீர் பெருக்கினர். 'ஒழுக்கம் தவறியவள் ஆயின் தீ என்னைச் சுடட்டும்'' என்று தீயில் பாய்ந்தாள் பிராட்டி! உலகங்கள் எல்லாம் நிலைகுலைந்தன. சந்திர சூரியர் வழிதடுமாறினர். ஆனால் சூடி இருந்த மலர்மாலை கூட வாடவில்லை இதைக் கண்ட அனைவரும் சோகக் கண்ணீருக்குப் பதிலாக ஆனந்தக் கண்ணீர் பெருக்கினர். அங்கியங் கடவுள் இராமன் முன் தோன்றி "சுவாமி! பிராட்டியின் கற்புக் கனல் தகிக்கிறது என்னால் பொறுக்க முடியவில்லை தேவியை அங்கீகரித்து என்னைக் காப்பாற்ற வேண்டும்'' என்று முறையிட்டான். இராமனும் இசைந்து சீதாதேவியை அணைத்துக் கொண்டான்.

சர்வக்ஞன் ஆன இராமபிரான் பிராட்டியின் மாசில்லாத நிலையை அறியாதவனா? அக்கினிதேவன் சொன்னபிறகு ஏற்றுக்கொள்கிறான் ஏன் இந்த நாடகம்? இதற்கு வான்மீகத்திலே சமாதானம் சொல்லப் பட்டு இருக்கிறது '' இவள் (சீதை) இராவணனது அந்தப்புரத்திலே பல காலம் இருந்ததமையால் அபவாதம் உண்டாகக் கூடும் நான் சீதையை பரீட்சிக்காமலே அங்கீகரித்து இருப்பேனாயின், சத்புருஷர்கள் என்னை மூடனும், காமுகனுமாயிருப்பவனே யன்றி, மானம் உடையவன் அன்றென்று நிந்திப்பார்கள். அந்த அபவாதத்தைப் போக்கிக் கொள்ளவே இங்ஙனம் செய்ய வேண்டி வந்தது ஜனகராஜன் குமாரத்தியான அவளுக்கும் கூட மற்றொருவர் சொல்ல வேண்டுமா? சத்தியத்தை வெளியிடுவதற்காகவும் மூன்று லோகங்களில் உள்ளவர்க்கு நம்பிக்கை உண்டாவதற்காகவும் சீதை அக்னியில் விழுவதை நான் அனுமதித்தேன்'' என்று கூறிக்கொண்டு போகிறான் இராமன். இராவணனால் சிறை வைக்கப்பட்டு இருந்த நிலையில் மாசு படிந்த மேனி, அழுக்கடைந்த ஆடை சடை பிடித்த கூந்தல் இந்த தோற்றத்தோடு வரவிரும்பிய பிராட்டியை சர்வாலங்கார பூஷிதையாக வர வேண்டும் என்று இராமன் விதித்தது எது கருதி என்று விளங்கவில்லை மெலிந்த மேனி, நலிந்த ஆடை, வேதனை மிகுந்த தோற்றத்தோடு வந்தால் கடும் சொற்களால் பிராட்டியை நிந்திக்க மனம் வராது. நிந்திக்க வேண்டும் என்ற கருத்து உடையவன் ஆனபடியால் அழகுபடுத்திக் கொண்டு வரச் சொன்னதாகத் தெரிகிறது'' என்று இதற்கு இவ்வகையில் அமைதி கூறுகிறார் வான்மீகத்திற்கு உரை கண்ட கோவிந்தராஜர். பிராட்டியைத் தீ சுடுவதற்கு முன்பு இராமன் சொல்லால் சுட்டு விட்டதன் பயனாகியது ஏன்? 'கடும் சொற்களைப் பேசியது சீதையைத் துறப்பதற்காக அல்ல. உலகத்தாருக்கு அவள் கற்பின் பெருமையைக் காட்டுவதற்காகவே' என்கிறார் வான்மீகி. வரம்பு கடந்து வைவதினாலேயா பிராட்டியின் பெருமையை உலகுக்குக் காட்ட வேண்டுமா? நல்லோர் சொல்வதற்கு கூசும் சொற்களை அல்லவா வாரி வீசி இருக்கிறான் இராமன். இதற்கு ஒரு நயமான அமைதி கூறுகிறார் கோவிந்தராஜர்

''பரம பாகவதன் ஆன இலக்ஷ்மணன் இடத்தில் பட்ட அபசாரத்தின் பலனை அனுபவித்ததமை கூறப்பட்டது' என்கிறார் என்ன அந்த அபசாரம்? மாரீசனது மாயக்குரலைக் கேட்ட சீதை தன் கணவனுக்கு ஆபத்து நேர்ந்துவிட்டதாகக் கருதி ஆடாமல் அசையாமல் நின்று கொண்டு இருந்த இலக்குவனைப் பார்த்துப் பேசிய பேச்சுக்கள்தாம். ஆதிகாவியமான வான்மீகத்திலே பிராட்டி இளைய பெருமாளைப் பார்த்துப் பேசிய பேச்சாகப் பின்வருமாறு கூறப்பட்டு இருக்கிறது. 'இலட்சுமணா! உன் அண்ணனுடைய அபயக் குரலைக் கேட்டும் நீ அங்கே போய்ப் பாராமல் இங்கேயே நிற்கிறாய்; உன் நிலை சரி இல்லை. நல்ல பாசம் உடையவன் போல உடன் தொடர்ந்து வந்தது எல்லாம் கள்ளம் என்றே தெரிகின்றது. பரதன் அரசைக் கவர்ந்து கொண்டது போலவே நீயும் ஒன்றைக் கவர்ந்து கொள்ளவே கரவாய் வந்திருக்கின்றாய். இராமன் இறந்து போனால் அவன் மனைவியான என்னைக் கைக்கொண்டு வாழலாம் என்பதே உன் எண்ணம் உன் எண்ணம் பலிக்காது. இராமனோடு வாழ்ந்த நான் உன்னைக் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டேன். இனி எதற்கு நான் உயிரோடு இருக்க வேண்டும்? அதோ, எரியும் அந்த நெருப்பில் வீழ்ந்து உயிரை மாய்த்துக் கொள்கிறேன்'' என்று இந்த வகையில் மேலும் தொடர்கிறது பிராட்டியின் பேச்சு!

அபிநவகவிநாதனான ஆன கம்பர் பண்பாடு கெடாமல், நாகரீகமான முறையில் கூறுகிறார் ''மாசு மறு வற்ற எனது சுவாமி அரக்கன் செய்த வஞ்சனையால் பிராணாபத்தான நிலையில் இருக்கிறார் என்பதை அறிந்திருந்தும் ஓடிப்போய்ப் பார்க்காமல் நின்று கொண்டு இருக்கிறாயே; அவருக்குத் தம்பியா நீ? ஒரு நாள் பழகியவர்கூட நண்பனுக்கு ஆபத்து என்றால் உயிரை விட்டு விடுவார்கள்: அண்ணனுக்கு ஆபத்து எனத் தெரிந்தும் உடல் நடுங்காமல், மனம் கலங்காமல் நின்று கொண்டு இருக்கிறாய்! அதோ, அந்த நெருப்பில் வீழ்ந்து மாய்கிறேன'' என்று இவ்வகையில் கூறுகிறார் கம்பர்:

'' குற்றமவீந்த குணத்தின் எமக்கோமகன்
மற்றைவாள் அரக்கன்புரிமாயையால்
இற்றுவீழ்ந்தனன் என்னவும நீ, அயல்
நிற்றியோ, இளையோய! ஒரு நீ''
என்றாள்.

'' ஒருபகல பழகினா உயிரை ஈவரால
பெருமகன் உலைவுறு பெற்றி கேட்டு, நீ
வெருவலை நின்றனை வேறு என்? யான்இனி
எரியிடை வீழ்ந்து உயிா துறப்பல், ஈண்டுஎன ''

# தேவர்கள் முதலானோர் வழிபட்டமையால் பெயர் பெற்றுள்ள சிவ ஸ்தலங்கள்

| | | |
|---|---|---|
| 1. | அககினி | — திருவனனியூர் |
| 2. | வேதம் | — திருக்கழுககுன்றம், புள்ளிருக்கு வேளூர், திருவோத்தூர். |
| 3. | யமன் | — திருத்தருமபுரம் |
| 4. | இநதிரன் | — இந்திர நீல பருப்பதம |
| 5 | இருடிகள் | — அகத்தியான் பள்ளி, திருவான்மியூர் திருக்கோடிகா, திருவமபா மாகாளம். |
| 6. | நளன் | — திருநள்ளாறு |
| 7. | நந்தி | — திருப்பருப்பதம் |
| 8 | மன்மதன் | — திருமணஞ்சேரி |
| 9 | காமதேனு | — கருவூர், பந்தனைநலலூா, பெணணுகடம். |
| 10. | சம்பாதி,சடாயு | — வைததீசுவரன் கோவில் |
| 11 | வாலி | — திருவையாறு |
| 12. | வைரவர் | — வடுகூர் |
| 13. | அரம்பையர் | — திருநீலக்குடி |
| 14. | நக்கீரர் | — திருக்காளததி |
| 15. | கணபதி | — திருச்செங்காட்டாங்குடி (கணபதீச்சரம்) |
| 16. | முருகன் | — சேய்ஞலூா, புள்ளிருககுவேளூர், திருமுருகன்பூண்டி |
| 17. | பிரமன | — கஞ்சனூர், காஞ்சீபுரம், சீகாழி |
| 18. | உமாதேவி | — காஞ்சிபுரம், மயிலாடுதுறை, மயிலாப்பூர், திருக்கேதாரம். |
| 19. | இலக்குமி | — திருவாரூர், திருநினறியூர் |
| 20. | பாணடவர் | — அறையணிநலலூா |
| 21. | வீமன் | — திருக்கோளிலி, திருத்துறையூர் |
| 22. | அர்ச்சுனன் | — திருவேடகளம் |
| 23. | பரசுராமன் | — திருவஞ்சைககளம் |
| 24. | இராமன் | — இராமேசுவரம, இராமனதீச்சுரம் |
| 25. | மஹா விஷ்ணு | — திருமாணிகுழி, திருமாற்பேறு, திருவாஞசியம. |

தகவல் :- டி. கமலவேணி -திருவெறும்பூர்

கவிசசக்கரவர்த்தி கமப நாடடரைப் பற்றி ஒரு கவிராயா "முன் முனியே மொழிநதாலும் முறை தவறு நெறி யெல்லாம் முற்றும நீக்கி, நனனயம வேண்டு உலகு என்றும் ஏற்கும ஒரு நாகரிகம் ஆக்கி வைத்தான்" என்று பாராட்டிப் பாடுகிறுர்.

திருமணம் ஆன சிறிது நாட்களி லேயே, தனது ஆருயிர் மனைவி ஊர் மிளையைத் துறந்து, மற்றவர்களையும் மறந்து, தமையனையே உயிர் எனக் கருதி வந்த அருமைத் தம்பி இலக்கு வனைக் கீழ்மக்களும பேசுவதற்குக் கூசும் இழிசொற்களால் பேசி விடு கிறுள். முன் எனத்தைக்கும் அச் சொறகளை நெஞ்சில் தாங்கிக் கொண டானேயன்றி அதை எங்கும் எச் சமயத்தும் வெளியிடவில்லை. 'சீதை யைக காவாது பாணசாலையினின்று ஏன் வநதாய?'' என இராமன கேட்டபோது கூட, பிராட்டி பேசிய இழி சொற்களை அவன குறிப்பிட வில்லை. ஒருவன தனது மனச்சுமை யைப் பிறரிடம் கூறுவதால் குறை யும் என்பார்கள். இலக்குவன் அம் முறையையும் பின்பற்றவில்லை. சர் வக்ஞன் ஆன இராமன் இதை-சீதை தம்பியைக குறித்துப் பேசிய இழி சொற்களை உணர்ந்து கொணடான். ''சீதை பேசிய கொச்சைச் சொற் களால் அப்பழுக்கு இல்லாத தம்பி எத்தகைய வேதனை அடைந்து இருப் பான் என்பதைப் பிராட்டி உணர வேண்டும்'' என்றே இந்த நடிப்பு.

சீதையைக் காவாது வந்த தம்பி யைக் கணடதும், ''ஆ, சீதா! லக்ஷ் மணு! என்ற குரல் மாரீசன் குரல் என உணராமல் என குரல என மயங்கி, காத்து நின்ற தமபியைக் கடும் சொற்களால் பேசி இருப்பாள். அது பொறுக்காமல் வந்து இருக்க வேணடும் 'இது மாயமான்' என்ற தமபியின் சொல்லை மீறி வந்தேன். இப்பொழுது சீதையினுல் தமபி என் சொல்லைக் கடந்து வர வேணடிய துர்ப்பாககிய நிலைக்கு ஆளாகி இருக கிறுன்! தம்பிக்கு எங்களால் எவ் வளவு துனபம்!

'' புன சொறகள் தநத பகுவாய அரக் கன, உரைபொய எனுது புகலவாள
வனசொறகடந்து மடமஙகை ஏவ,
நிலைதேரவந்த மருளே
தன்சொல கடந்து தளாஙனைற நெஞ் சம, உடையேன மருங்கு தனியே
எனசொல கடநது மனமும தளர்ந்து,
இளவீரன வந்த இயலபே!

என்ற இராமபிரானுடைய கழி விரக்கப பேச்சிலே 'வன் சொற்கள தநது மடமஙகை ஏவ' என்ற வார்த்தை இலககுவனைப் பிராட்டி கொடும் சொறகளால பேசி இருப பாள் எனபதை உணர்ததுகிறது அலலவா?

இதனுல் ஒருவன பிறருககு எதைச செய்கிருனே அதையே அவன் பெறு வான என்ற நியதியை அறிகிறேம். மாசுமறு இல்லாத இலக்குவனைப் பார்தது பிராடடி பேசிய கடும சொற்களின் விளைவுதான இராமன் பிராட்டியைப் பார்த்துப் பேசிய நிந்தனைச் சொற்கள் எளியவனை வலியவன் அடித்தால், வல்யவனை ஆண்டவன் அடிப்பான் என்பது அனு பவ மொழி. அதனுல் நமது சான் ருேர்கள் நல்லதையே நினை, நல்ல தையே பேசு, நல்லதையே செய் என்று அறிவுரை கூறுகிருர்கள்.

★

# ★ கீதை காட்டும் நல்வழி ★

திரு. டி. கே. நாராயணன,
M.S c., M.Phil.
ஆசிரியர் ''சமயஜோதி'' மதுரை.

## புருஷோத்தம யோகம்

### அத்தியாயம்—15.

### பகுதி—9.

பரமாத்மாவிடமிருந்து வரும் அடுத்த வலலமை இனி விளக்கப்படு கிறது.

அஹம் வைச்வானரோ பூதவா
பராணிநும தேஹமாச்ரித. |
ப்ராணுபானஸமாயுக்த'
பசாமயனனம சதுர்விதம ‖
(15-14)

'உதரக் கனலாக நான் உயிர்களின் உடலில் இருநது கொண்டு பிராண அபான வாயுக்களுடன் கூடி நான்கு வித அன்னத்தை ஜீரணிக்கிறேன்!'

நாம் எதையெல்லாமோ கணட கணட வேளைகளில் சாப்பிடுகிறோம். வாய் வழியாக வயிற்றுக்குள் போடப் பட்ட பொருள்கள் உடலினுள் அடை யும் மாறறங்கள வியப்புக்குரியவை. மிக அற்புதமான முறையில் உண்டது யாவும் ஜீரணமாகினறன. உண்ட பொருளகள் யாவும் உடலின பலப் பல இடங்களில் பல்வேறு மாறறங் களை அடைந்து உருமாறிப் பெயரும் மாறி உடலுக்குச சக்தியை அளித்து, எஞ்சிய சக்கைப் பகுதி ஒரு புறம் மலமாகவும, மறுபுறம மூததிரமாக வும மாறுகினறன. இந்த அனைத்து மாறறஙகளையும உளளிருநது இயக கும் சக்தி 'வைச்வானரன' என்று அழைக்கப்படுகிறது. பொருள்களை வாயகருள் போடுவதுடன் நமது வேலை முடிந்து விடுகிறது. பின் அதை ஜீரணிப்பது, பல பொருள் களாக மாற்றுவது அனைத்தையும் செய்வது ஈசுவர சக்தியே என்று பக வான் இங்குக் குறிப்பிடுகிறார். 'வைச் வானரன' என்பது பொதுவாக அக்னியை குறிக்கும் ஒரு சொல் ஆகும். உடலில் உஷ்ணமாக இருந்து பொருள்களை ஜீரணிகக உதவும் அநத வெப்ப சக்திக்கும 'வைச்வான ரனீ' என்றுதான பெயா. இதைத் தமிழில் 'உதரக்கனல்' எனலாம்.

'விச்வநர', 'விச்வ புருஷ' என்பது தான் வைச்வானரன் எனப்படுகிறது. எவன எல்லா உயிரிலும் உறை கிறானே அவனே 'வைச்வானரன்' எனப்படுகிறான். அனைதது உயிர்களும் ஏதாவது ஒரு வகையில் உணவை உடகொணடே உயிர் வாழ்கினறன. எந்த உயிர் எததகைய உணவை உட்கொணடாலும அதை ஜீரணிக் கும் சக்தி இறைவனுடையதாகும். நெருப்பு அனைத்தையும் ஏற்பது போல, இந்த உதரக கனலும் பல் வகை உணவுப் பொருள்களை ஏற்று ஜீரணிக்கிறது.

மாண்டூக்ய உபநிஷதத்தில் வைச் வானரவித்தை பற்றிப் பேசப்படு கிறது. அதில ஜாக்ரத் அல்லது நனவு நிலையை விருமபுபவன் வைச் வானரன் எனப்படுகிறான. அதாவது நனவு அல்லது விழிப்பு நிலையில் கடபுலனாகும அனைத்துப் பிரபஞ்ச மும் பகவானே. நமக்குளளே பக வான உறைகிறா. நாம் உணவு உட் கொளளும போது நம கைகளின் மூலம் அவரே தட்டிலிருநது உணவை வாய்ககுள திணிதது, வயிற்றில் ஏறறு வைச்வானர ரூபததில் அதை ஜீரணிககிறா. உணவை நாம் சாப் பிடுவதாக நாம் நினைக்கிறோம். ஆனால இங்கே பகவான் தாமே அதை ஏற்பதாகக் கூறுகிறார். ஆகை யால் உணவு உண்பதும் ஒரு புனிதச் செயலாக, யோகத்தின் ஒரு அம்ச மாக மாறி விடுகிறது. எத்தகைய உணவை நாம் உணண வேணடும, எதை உணணலாகாது என்று பக வானே பிறிதொரு இடத்தில கூறி யுள்ளார்.

இந்த அத்யாயம் மிக முக்கிய மானது என்று ஏற்கனவே கூறப்பட டது. குறிப்பாகச் சில இடங்களில் நவீன விஞ்ஞானக கருத்துக்களையும் சிறிது விளக்கமாகக் கூறுவது அவ சியமாகிறது. இந்தியத் தத்துவம நவீன விஞ்ஞானக கருத்துக்களுடன் எவ்வாறு ஒன்றிப் போகின்றன என் பதை எடுத்துக் காட்ட கொஞ்சம் விஞ்ஞான பாஷையில் விளக்குவதும் தேவைப்படுகிறது.

புரோட்டீன்கள், கார்போஹைட் ரேட்டுகள், கொழுப்பு, வைட்டமின் கள் மறறும தாது உப்புக்கள் முதலி யன உடல் வளர்ச்சிக்குத் தேவை யான அடிப்படைப் பொருள்களா கும்.இநத ஒவ்வொரு வகை உணவுப் பொருளும் வெவ்வேறு என்ஸைம் களால் ஜீரணிக்கப்படுகின்றன. தாவரங்களின் ஸெல்களில் ஜீரணம் நிகழ்கிறது. உயர் ஜீவராசிகளில் அது ஜீரணமண்டலத்தில் நிகழ்கிறது. மனிதனிடம் ஜீரணம் அவனது வாயில் தொடங்குகிறது. வாயில் உமிழ்நீரில சுரககும அமைலேஸ் என்ற என் ஸைம உணவுப் பொருளில உள்ள ஸ்டார்ச்சுப் பொருளை ஜீரணிக்கத் தொடங்குகிறது. வயிற்றில பெப்ஸின் என்ற என்ஸைமும் மற்றும ஹைட் ரோகுளோரிக அமிலமும புரோட் டீன்களை ஜீரணிககின்றன. இவை தவிர சிறுகுடல் பகுதியில் வேறு பல என்ஸைம்கள் சுரந்து ஜீரணத்துக்கு உதவுகின்றன. இத்தனை என்ஸைம் களும் பல்வகை உணவுப் பொருள் களை உடல் ஏற்கும் விதத்தில் மாற்றி விடுகின்றன. சிறுகுடல் பகுதியில்

உணவின் பெரும்பகுதி உட்கிரகிக்கப் படுகிறது. ஜீரணமாகாத சக்கை பெரும் குடலுக்குள் உந்தப்பட்டு, பாக்டீரியாக்களினல் மலமான பிறகு வெளித்தள்ளபபடுகிறது

இது விஞ்ஞான ரீதியில் ஜீரணத் துககான விளக்கமாகும். இந்த சுலோகத்தில் பகவான் மற்ருெரு விளக்கம் தருகிருர். ஜீரண மண்டலத்தின் மேல்பகுதியில் பிராணன் எனனும் வாயுவும, கீழ் மணடலத்தில் அபானன் என்னும் வாயுவும் செயல் படுகின்றன. உடலில் நிகழும் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் ஆதாரமாயிருப் பது பிராணனே. உடலில் உள்ள சூட்டுடன் இப்பிராணன் செயல்படுகையில் வைச்வானரன் என்று அழைக்கப்படுகிறது. பிராணன் வெறும் காற்று அல்ல. அது வெறும் ஆக்ஸிஜன் அல்லது பிராண வாயுவும் அலல. அது உயிரினங்களில் மட்டுமே காணப்படும ஒருவித உயிர்ச் சகதியாகும. உடல் மரிக்குமபொழுது உடலுக்குள் காற்று இருக்கும். ஆனல பிராணன செயலபடாது. உடலின வெப்பம ஒரு குறிப்பிட்ட அளவு இருககும் பொழுதுதான் என்ஸைம்களெல்லாம் செயல்பட முடியும. மூககு வழியாகப் பிராணனை உள்ளிழுத்து வெளிவிடுகிருேம். இநத இரண்டு வகை வாயுவும் சேர்ந்துதான் உடலின் உஷ்ண நிலையில் நான்கு வகை உணவை ஜீரணிக கின்றன.

அக்னி என்ற குதிரையின் தேரோட்டி வாயுவாகும. கொல்லனின உலைப்பட்டறையில் உள்ள அக்னியை கொல்லன் ஊது குழல் அல்லது துருத்தியால் ஊதி எரியச் செய்கிருன். காற்று இல்லையெனில் நெருப்பு அணைந்து போகும். அது போல இந்த உடலில் உள்ள 'அக்னி' யை பிராணனும் அபானனும் இணைந்து எரியச் செய்து கொண்டிருக்கின்றன.

நமது உடலுக்கு சம்ஸ்கிருதத்தில் தேஹம் என்று பெயர். 'दहति इति देहः'-எது எரிகிறதோ அது தேஹம். நமது உடலின் உஷ்ணநிலை 98.4 பாரன்ஹீட்டாகும். இது ரசாயன ஆலைக்கு நிகரான நமது உடலில் நிகழும் பல்வேறு ரசாயன மாற்றங்களின் விளைவாக உணடாகும் உஷ்ண நிலையாகும். ஆக்ஸிகரணமாகும பொழுது உஷ்ணம் வெளிப்படுகிறது. இது ஒரு ரசாயன மாற்றமாகும். நாம் உட்கொள்ளும் பலவேறு பொருள்கள் நாம உள்ளிழுக்கும ஆக்ஸிஜன் வாயுவால் எரிக்கப்படுகினறன. அப்பொழுது வெப்ப சக்தி வெளிவிடப்படுகிறது. நாம் பெறும் சக்தியின் அடிப்படை இதுவேயாகும். தொண்டைக் குழிக்குள் நமமால் தள்ளப்படட உணவுப் பொருளகளை ஜீரணிக்கும் சக்தி 'வைச்வானரன்' அல்லது இறைச் சக்தியாகும். நல்ல விருநதுச் சாப்பாடு வயிறு நிறையச் சாப்பிடுகிருேம். அந்த வேளையில் மேலும் ஒரு கவளம் கூட ஏற்க முடியாது எவ்வளவுதான் ருசியான பால்பாயசமாக இருந்தாலும, ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் சாப்பிடமுடியாது. அவ்வளவு திருப்தியாகச்சாப்பிட்டாலும் சுமார் நானகு அல்லது ஐந்து மணி நேரத்துக்குள் உணடது அனைததும் ஜீரணமாகி மீண்டும் பசி எடுக்கிறது? வயிறு புடைக்கச் சாப்பிட்டது எங்கே போயிற்று? ஜீரணம் ஆயிற்று. யார் ஜீரணித்தது? பொருள்கள் என்னென்ன விதத்தில் உடலின் எந்தெந்த பாகஙகளில் எப்படி மாற்றம அடைந்தன? இதெல்லாம் ஒரு அறபுதமான நிகழ்சசியாகும.

'பசாம்யனனம் சதுர்விதம்'- 'நான்கு வகையான அன்னத்தை அதாவது உணவை ஜீரணிக்கிறேன்' என்கிருர் பகவான.

உணவு நான்கு வகைப்படும். 1. பக்ஷ்யம்: பல்லால் அரைத்துச் சாப்பிடக்கூடியவை. உதாரணம்: சாதம், ரொட்டி, சப்பாத்தி போன்றவை. 2. போஜ்யம்: உறிஞ்சிக் குடிக்கக் கூடியவை. பால் தயிர் மோர் போன்றவை. 3. லேஹ்யம்: நாக்கால் நக்கிச் சாப்பிடக் கூடியவை. தேன், சட்டினி போன்றவை. 4. சோஷ்யம்; விழுங்கக் கூடியவை ஆப்பிள், ஆரஞ்சு, வாழைப்பழம் போன்றவை.

மற்ருெரு வகையிலும் உணவை நான்கு விதமாகப் பிரிக்கலாம். 1. பிருதிவி அல்லது மண அமசம அதிகமாக உள்ளவை. அரிசி, கோதுமை, கேப்பை போன்றவை. (பிருதிவியான்னம்) இவை மனிதர்கள், விலங்குகள மற்றும் பறவைகளுககும் பொதுவானவை 2. நீர் அம்சம் மிகுந்தவை (ஆப்யான்னம்) சாதக பட்சி மழைத் துளி மேகத்திலிருநது கீழ்நோக்கி விழுகையிலேயே அதை உணவாக ஏற்று வாழும். தவிர சில நீர் வாழ் உயிர்களும் நீரை மட்டுமே உட்கொணடு வாழும். 3. அக்னி அல்லது நெருபபு அமசம் அதிகமாக உள்ளவை: (தேஜஸான்னம்) சகோரம் மறறும தீக்கோழி நெருப்பை உணவாகக் கொள்வது உலகப் பிரசிததம. 4. வாயு அல்லது காறறு அம்சம் அதிகம் உள்ளவை: (வாயுவானனம) மாதக் கணக்கில் பாம்புகள் வெறும காற்றை மட்டுமே உட் கொணடு உயிர் தரிக்க வல்லவை.

பிரஹததாரணய உபநிடதத்தில் கீழ் காணும் ஒரு பகுதி வருகிறது.

अयमग्नि वैश्वारो योयमन्त:
पुरुष : येनेदमन्नं पच्यते ||

அயமக்னிர்வைச்வானரோ யோய
மந்த: |
புருஷ: யேனேதமன்னம பச்யதே ||
(பிரு உப 5-9-1)

'மனிதனுள் இருக்கும் உணவை ஜீரணிககும இநத நெருப்பே வைச்வானரன எனப்படுகிறது'

போஜன காலததில் இந்த சுலோகத்தைச் சொல்லி உண்ணும் உணவை ஸோமனுகவும், உண்ணும தன்னை வைச்வானரனுகவும கருதி எவன் உண்கின்ருனே அவனை எநதவித அன்ன தோஷமும் அணுகுவதில்லை என்று ஸ்ரீஆதிசங்ராச்சாரியார் குறிப்பிடுகிருர்.

நாம் உண்ணும் உணவில் பல்வேறு குற்றங்கள் அல்லது தோஷங்கள் உண்டு. அவை என்னென்ன என்று இனிக் காண்போம். (தொடரும்)

# தொண்டனேன் கண்டு கொண்டேன்

உலகில் மானிடராய்ப் பிறந்து மொழி பல பயின்று நூல் பல கற்று அறிஞராய் வாழ்வது ஒரு வழி. கற்றுலும் கற்காவிடினும் இறைவனே தஞ்சம என்று அடைந்து இறைவனிடத்தும அவன் தோற்றுவித்த உயிர்களிடத்தும் அன்பு செலுததி உய்யும் வழி மற்றென்று. இரு வழிகளும் ஒருவரிடத்தில் இணைந்திருப்பது 'பொன் மலர் நாற்றமுடைத்தது' போன்றும். நான் யார்? என உள்ளம் எது? உலகம் எப்போது, யாரால உண்டாககப் பட்டது? ஏன நான பிறந்தேன்? இறப்பின் பின் மனித நிலை என்ன? இறைவன் யார்? எனக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு யாது; போன்ற பல வினுககளுக்கு நூல்கள் மூலமும் கற்றுத்துறை போகிய வல்லுநர்கள் மூலமும் விடை தெரிந்து கொணடு ஞான மார்க்கத்தில் நிற்பது ஒரு வகை; இக்கேள்விகளுக் கெல்லாம ஒரே விடை பரம்பொருளைச் சென்றடைநது உள்ளததினுள்ளே அப்பொருளைக் கண்டுப் பேரானநதம அடைதல மற்றொரு வகை. அவ்வாறு பேரானந்தம அடைநத பெருமக்கள் தாம் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெறுதற் பொருட்டு அயராது பாடுபடுபவர்; ஆற்றலுடன உழைப்பர்; அறைகூவி அழைபபர். எடுத்துக் காட்டாக,

Dr. R. கோபாலகிருஷ்ணன்,
சென்னை

'' கண்டோம் கண்டோம கண்டோம்
கண்ணுக்கினிய கண்டோம்
தொணடீர்! எல்லீரும் வாரீர்
தொழுதுதொழுது நின்றுர்த்தும்
வண்டார் தண்ணந் துழாயான் மாத
வன் பூதங்கள் மண்மேல்
பண்தான் பாடி நின்றுடிப் பரந்து
திரிகின்றனவே.''

என்று நமமாழ்வார் மெய்யடியார்களின் கூட்டத்தைக் கண்டு பிறரும் காண அழைக்கின்றுர்

பகதர், முக்தர், யோகி, ஞானி சிததா, தொண்டர் ஆகியோர் அனைவருமே இறைவனை ஒவ்வொரு நிலையில நின்று அனுபவித்தவர்கள் ஆவர். இவர்களனைவருள்ளும் தொண்டர்களின் நிலைச் சிறப்புடைத்து எனலாம். ஏனெனில் இறைவனிடத்தும் அவன் அடியாரிடத்தும் அயராமல் பணி செயவதையே தம் வாழ்நாளில கடமையாகவும் குறிக்கோளாகவும் கொணடு வாழ்வர். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்பார் அப்பர் பெருமான் இறைவன் தொணடர்களிடத்திலதான் இருப்பான் எனபதை உணர்நது கொணட தாயுமானவர், 'தொணடர்களிடத்திலோ நீ வீற்றிருப்பது? என்று இறைவனை வினவுகின்றுர். வன்தொண்டர் என்றழைக்கப்பட்டும் சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் திருமணப் பந்தரில் தடுத்தாட் கொணட சிவபெருமான் ''வித்தகம் பேச வேண்டாம; பணி செய்ய வேணடும்'' என்று பணிக்கின்றுர். 'அன்பர் பணி செயய எம்மை ஆளாக்கி விட்டு விட்டால் இன்ப நிலை தானே வந்தெயதும பராபரமே' என்பார் தாயுமானவர். எனவே ஆணடவன் பணியையும் அன்பர்தம பணியையும் ஒருங்கே ஆற்றுவதையேக் கடனெனக கொண்டவர்கள் தொண்டாகள் என்பது புலப்படுகிறது.

'' நாளேல அறியேன் எனககுள என
நானும்
மீளா அடிமைப் பணிசெயயப் புகுந்
தேன
நீளார் மலர்ச்சோலைகள் சூழ்திரு
நாவாய்
வாளேய் தடங்கண் மடப்பின்னை
மணுளா''

(திருவாய்மொழி 9, 8, 4)

என்று நம்மாழ்வார் கூறுவதிலிருந்து இறைவனுக்கு அடிமைப்பணி புரிவதின அவசியத்தை உணரலாம். திருமஙகையாழ்வாரும, தம்மைத் தொழுது வணஙகும் தொண்டர்களின் துயரை எம்பெருமான் நீக்குவான் என்று அருளுகின்றுர்.

'' துஞ்சினி யுனக்குச சொலலுவன்
மனமே!
தொழுதெழு தொண்டாகள் தமக்கு
பிணியொழித் தமரர் பெருவிசும
பருளும
பேரரு ளாளனஎம பெருமான்''

(பெரிய திருமொழி 1, 4, 4)

மேலும்,

'' பாவி யாதுசெய் தாய்என் னெஞசமே!
பண்டு தொண்டுசெய்தாரை மண்
மிசை
மேவி யாட்கொண்டு போய்விசும்பேற
வைக்கும்எந்தை
கோவி நாயகனை கொண்டலஉந்து
உயா
வேங்கட மலையாண்டு வானவர்
ஆவி யாயிருபபாறகு அடிமைத்
தொழில பூண்டாயே''

(பெரிய திருமொழி 2, 1, 4)

என்றும் திருமங்கையாழவார் அருளுவதிலிருந்து எம்பெருமான, விருப்பு வெறுப்பின்று அன்று தொட்டுத தொண்டுசெய்தாரை விரைந்து வந்து ஆட்கொணடருளி மேலான உலகில் வைத்திடுவான என்பது புலப்படுகிறது.

தொணடு நெறியில ஈடுபடுபவர்கள் தமமை எப்போதும பிற தொண்டர்கட்டும் அடியவாகட்கும் பின்னே வைத்துத்தான் பேசுவா.'அப்பாலும் அடிச்சார்ந்தார் அடியாரக்கும் அடியேன்' என்பார் சுந்தரர். 'தொணடர் தொணடா தொணடர் தொணடன் சடகோபன்' எனறு பல இடங்களில் தம்மைப் பிற தொண்டர்களுக கெல்லாம் தொண்டன் என்று கூறிக

கொள்கிறார் நம்மாழ்வார். இங்கே பிற தொண்டர்களை 'தொண்டர்' என்று உயர்த்தியும் தம்மைத் 'தொண்டன்' என்று குறைத்தும் மதிப்பிடும் தன்மை வியப்பிற்குரியது. அடக்கமும் பணிவும் தொண்டர்களுக்கு அவசியம் என்பதையும் இச்சொற்றொடர் எடுத்துக் காட்டுகிறது.

எம்பெருமானுக்கு ஆளாகித் திருத்தொண்டின் நெறி நின்றார் எப்போதும் பரம பரம்பரனையே ஏத்துவர்; திருமலர்ப் பாதங்களையே காணுவர், தொண்டே செய்து உய்வர். திருவாய் மொழியில்,

'' கண்டேன் கமல மலர்ப்பாதம்; காண்டலுமே
விண்டே யொழிந்த வினையா யினவெல்லாம்
தொண்டேசெய் தென்றும் தொழுது வழியொழுக
பண்டே பரமன் பணித்த பணி வகையே''

(திருவாய்மொழி 10, 4, 9)

என்று திருவாய் மலர்ந்தருளுகின்றார். ஏனெனில் எம்பெருமானுக்கும் மெய்யடியார்களல்லாது வேண்டியவர்கள் வேறு இல்லை எனலாம். ''பழமையான நான்கு வேதங்களும் கண்டறிய முடியாத தன்மையுடையவன் என்று எண்ணி எண்ணிப் பல அண்டங்களிலும் உள்ள தேவர்களெல்லாம் துதிக்கும் தலைவராகிய திருவையாற்றில் உறையும் சிவபெருமானுக்கு அடியவர்களுடைய தொண்டையன்றித் துணை வேறில்லை; தோலையன்றி வேறு உடையும் இல்லை; அவர் அடியார்க்குச் செய்யும் அருள், காட்சி தருதலன்றி வேறில்லை. அவர் அடியார் மனத்தினுள்ளே கலந்தபின் அவ்விடத்தைவிட்டு நீங்குதலும் இல்லை''. என்று நயம்பட உரைக்கின்றார் அப்பரடிகள்.

நல்வினைகள் பெறுதற்கு எம்பெருமானுக்கு அடிமைத்தொழில் பூணுதலே சிறந்தவழி என்கிறார் சம்பந்தப் பெருமான். 'நல்ல மனமே! நீ தினமும் எம்பெருமானைத் தவறாது தியானிப்பாயாக. அவரவர் உலகத்தில் வாழும் நாட்களையும் சாகும் நாட்களையும் யார் அறிவார்? திருச்சாய்க்காட்டில் வீற்றிருக்கும் கண்ணுதற் கடவுளார்க்குத் தலை தினமும் பூக்களைத் தாங்கிச் செல்லவும், காதுகள் அவனுடைய புகழைக் கேட்கவும், நாக்கு நாளும் அவனுடைய திருப்பெயர்களைச் சொல்லித் துதிக்கவும் செய்தால் எப்போதும் தீவினையின்றி நல்வினையே பெறலாம்.''

திருமாலுக்கு திருவனந்தாழ்வான் எனப்படும் அரவம், உலவினால் குடையாகவும், எழுந்தருளியிருந்தால் சிங்காதனமாகவும், நின்றால் பாதுகையாகவும், நீள்கடலுள் பள்ளி கொள்ளுங்காலைத் தெப்பமாகவும், இரத்தின ஒளியாகவும், அழகிய பட்டுடையாகவும், தழுவிக் கொள்ளும் மெத்தையாகவும் ஆக பலவகையால் தொண்டு செய்வது போன்று அடியார்களும் பகவானுக்கு எல்லாவித மான தொண்டுகளையும் செய்தல் வேண்டும், என்பது பொய்கையாழ்வாரின் திருவுள்ளம்.

தொண்டு நெறியில் நின்றோர் எம்பெருமானைக் கண்டு வணங்குவர்; பிறர்க்கும் (வழி) காட்டுவர். திருமங்கையாழ்வார்,

தொண்டரயார் தாம்பரவும் அடியினானைப்
படிகடந்த தாளாளற் காளாய் உய்தல்
விண்டானை தென்னிலங்கை யரக்கர் வேந்தை
விலங்குண்ண வலங்கைவாய்ச் சரங்களாண்டு
பண்டாய வேதங்கள் நான்கும் ஐந்து
வேள்விகளும் வேள்வியோ டங்க மாறும்
கண்டானை தொண்டனேன் கண்டு கொண்டேன்;
கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே.

(பெரிய திருமொழி 2, 5, 9)

என்று தான் கண்டுகொண்ட பேருண்மையை எடுத்தியம்புகின்றார். ★

# புரோஹித் சங்கம், திருமலை
## கட்டண விவரங்கள்

| | ரூ பை. |
|---|---|
| பிராமணர் மற்றும் வைசியர் திருமணம் | 50—00 |
| பிராமணர் மற்றும் வைசிய உபநயனம் | 40—00 |
| மற்றைய திருமணங்கள் (ஹோமம் இல்லாதது) | 30—00 |
| மற்றைய திருமணங்கள் (ஹோமத்துடன் அல்லது கன்யாதானத்துடன் நடைபெறுவது) | 36—00 |
| சத்ய நாராயண விரதம் | 20—00 |
| கேஸ கண்டனம் மற்றும் மற்றைய பூசைகள் | 10—00 |
| பிண்ட பிரதானம் | 5—00 |
| ஹிரண்ய கோதானம் | 6—00 |
| அன்னதானம் | 3—00 |
| சாளக்ராம தானம் | 1—25 |
| சங்கல்பம் | 1—00 |
| ஸோடஸ மகாதானம் | 16—00 |
| தஸதானம் | 10—00 |
| நவக்ரஹ தானம் | 9—00 |
| சங்கல்பம், பூசை | 1—00 |

# இறைவனும் ஆசார்யனும்

**பிறவி** எனும் பெருங்கடலில் விழுந்து முன் வினைகளுக்கேற்ப சுகதுக்கங்களை அநுபவித்துக கொண்டிருக்கிற நம் வாழ்க்கையின் முழு முதற்பயன் எம்பெருமானின் திருவடிகளையடைந்து அவனிடமிருநது பிரியாமல் இருப்பதே ஆகும். அந்த எம்பெருமானை அடைவதற்கு வழிகள் யாவை என்பதைப் பல சாத்திரங்கள் பல விதங்களாய்ச் சொல்லியிருக்கின்றன. கண்ணன் தேர்த் தட்டிலமர்ந்து அர்ஜுனனுக்குப் பகவத் கீதை மூலமாக இதைத்தான் உபதேசித்தான். ஒவ்வொரு ஆன்மாவும், ஞானம் பக்தி கர்மம் என்கிற வழிகளில் இறைவனை வந்தடைவது சாத்தியமாகிறது எனபது இதில் தெளிவு படுத்தப்படுகிறது. எம்பெருமானை நாம் நன்கு தெரிநது கொணடு அவனிடத்தில் பக்தி செலுத்தி அவனையே சரணாகதி அடைவதுதான அவனை அடைவதற்குச சிறந்தவழி என்பது வைணவ சித்தாநதம். ''நெறியும அவனே! வாசலும் அவனே!'' என்பது ஆழ்வாாகள திருவாக்கு. எம்பெருமான் பகதிககு வெகு எளிதில் கட்டுப்படக கூடிய வனாதலால, பக்தி மார்ககததில் எமபெருமானை அடைவதுதான எளிமையான வழி எனறும், ஸமஸாரமாகிற பெருங்கடலில விழுநது நோவு படுகிற சேதனனுககு அதை விடச்சிறநத சாதனம வேறு எதுவும இலலை என்று எம்பெருமானார் தம்முடைய தர்சனமாகிற விசிஷ்டாத்வைததத்தில நிலை நாட்டுகிறார். 'மயர்வற மதி நலம் அருளப் பெற்ற' ஆழ்வார்களின் அருளிச் செயல்கள்தான் இந்த தரிசனத்திற்கு அஸ்திவாரமாக அமைந்தது. பக்தியில் ஆழ்ந்து அமிழ்ந்த ஆழ்வார்கள் எம்பெருமானின் பரம கிருபையாலே வலுவில் வந்து ஆச்ரயிக்கப்பட்டவர்கள். இவ் வாழ்வார்களின் அருளிச் செயல்களின் மூலமாகத்தான் நாமெல்லாம் எம்பெருமானை நன்கு தெரிந்து கொள்ள முடிகிறது வேதங்களில் சொல்லப்பட்டக கருத்துக்களை மிக எளிமையாக்கி அமிாத ரஸமாக திவ்ய ப்ரபந்தங்களை ஆழ்வார்கள் அருளிச் செய்துள்ளார்கள். ஆழ்வார்களின் அருளிச் செயல்களையே வேதங்களின் ஸாரமாகவும், இவைகளைத் திராவிட வேதங்கள் என்றும் வைணவம் போற்றுகிறது. திவ்யப்ரபந்தங்களிலும் முகியமாகக் நம்மாழ்வாரின் திருவாய்மொழி மூலமே எமபெருமானின் தன்மைகளைத் தெள்ளத் தெளியக் கற்க முடியுமாகையாலே, 'தரிசனம்' கண்ட எம்பெருமானார் திருவாய் மொழிக்கு விரிவான விளக்க உரைகளை எழுதுமாறு தன் சீடரான திருக்குருகைபபிரான பிளளானிடம பணித்தார். அமுதமாக இருககககூடிய திருவாய மொழியின் விளகக உரைகளின் மூலமாக சேதனாகள யாவரும எம்பெருமானை எளிதில் புரிந்துகொணடு பிரபத்தி மார்ககததில் பகதிப்பெருங்காதலை பெற்று உஜ்ஜீவிகக எம்பெருமானார் வழி காட்டினா.

நாலாயிரதிவ்யப் பிரபந்தங்களைத் தொகுத்துச் சேர்த்த நாதமுனிகளும் அதன் பின்னர் அவர்தம் திருப்பேரரான யாமுனாசார்யராகிற ஆளவந்தாரும் அவர்தம் சீடரான எம்பெருமானாகிற ராமாநுஜரும் அவர் நியமனம் செய்த, தர்சன ப்ரவர்த்தகர்களான நஞ்ஜீயர், நம்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை பிள்ளை லோகாசாரியர், திருவாய் மொழிப்பிள்ளை, மணவாள மாமுனிகள் வரையில், ஓராண் வழியாய் இந்த 'தரிசனம்' என்னும் பக்திப் பயிர் வளர்ந்து செழித்தது. வாழையடி வாழையென ப்ரவர்த்தகர்களால் நியமனம செய்யப்பட்ட பரம காருணிகர்களான இநத ஆசாரியர்களின் பரம்பரையைத்தான் குரு பரம்பரை என்று வைணவம் போற்றுகிறது. ஆளவந்தார் தொடங்கி, பரம காருணிகரும், விசதவாக் சிகாமணியுமான ஸ்ரீமத் மணவாள மாமுனிகளோடு மேலே சொன்ன ப்ரவர்த்தக நியமனங்கள் முடிவடைகின்றன. இந்த குருபரம்பரை ஆசாரியன்-சிஷ்யன் என்கிற அந்த உயர்ந்த 'பாவத்தையும்' ஓராண் வழியாய் உபதேசக்கிற அந்த பாரம்பரியத்தையும மிக வலியுறுத்திச் சொல்கிறது. முழுமையாக எதைக கற்கவேண்டுமானாலும் நல்ல ஆசாரியன் மூலமே அதைக் கற்கமுடியும் என்றும் ஆசாரிய கடாக்ஷத்தாலே நேரடியாகப் பெறுகிற உபதேசங்களை நம்முடைய வாழ்வை வளம் பெறச் செய்கின்றன என்றும ஆசாரியனலலாமல பகவானிடமிருந்து நேரிடையாகவோ, உபாசனையினாலோ, வேறு எந்த வழியிலுமோ பெறுகின்ற ஞானம பயனற்றது என்றும் தென்னாசாரிய ஸம்பிரதாயம் வலியுறுத்திச் சொல்கிறது.

எம்பெருமானை நமக்குக காட்டிக் கொடுப்பவன், எம்பெருமானை நாம் புரிநதுகொள்ள உதவுபவன், நம்முடைய அஞ்ஞானமாகிற இருளை அகற்றி நம் உளளத்தில் ஞான விளக்கை ஏற்றி ஒளிர்விடச் செய்ப

'பூரம்' சத்தியமூர்த்தி
சென்னை-5.

வன் இந்த ஆசாரியனே! ஆகவே தான் நம்மை உஜ்ஜீவிக்கிற பரம காருணிகரான ஆசாரியனிடத்தில் நாம் பிரதிபத்தியோடு கைங்கரியம் பண்ண வேண்டியது அவசியமாகிறது. ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும் பரம் பரையாக வந்த தமது ஆசார்யர் களைப் போற்றிப் பணிந்து 'ஸமாச்ர யணம்' பண்ணிக்கொண்டு மந்த் ரோபதேசம் பெறுவது ஸ்ரீவைஷ்ணவ லட்சணம். இந்த ஆசாரியன் திருவடி சம்பந்தமே நமக்குக் கிடைத்த பேரின்பம் என்று போற்றுதல் எம் பெருமானின் திருவருளை நேரிடை யாகப் பெற்றுக்கொடுக்கிறது.

எம்பெருமானாரின் திவ்யசரித்தி ரத்திரத்தில் வருகிற ஒரு நிகழ்ச்சிக் குறிப்பு நம்மைச் சிந்திக்க வைக் கிறது.

திருவரங்கத்தில் நம்பெருமாள் சந்நிதியில் தினமும் காலக்ஷேபம் செய்துகொண்டிருந்த எம்பெருமா னார் வழக்கம்போல இரவில் கடைசி யாகப்பெருமாளை ஸேவிப்பது உண்டு. அப்படி ஏகாந்தமாக ஸேவிக்கை யில் ஒருநாள், அர்ச்சகரின் ஆவேச மூலமாய், "எம்பெருமானாரே! உம் முடைய கைங்கர்யங்களை யாம் மெய்ம்மகிழ்ந்து பாராட்டுகிறோம். உமக்கு வேண்டிய வரத்தைக் கேட்க லாம்" என்று அனுக்ரஹித்தார்.

எம்பெருமானார் பதில் கூறவில்லை. லேசாக சிரித்துக்கொண்டார். "எம் பெருமானாரே! ஏன் சிரிக்கிறீர்? உமக்கு வேண்டிய வரம் தரச் சித்த மாக இருக்கிறோம்!"

"ஸ்வாமி! அடியேன் விரும்பும் வரத்தை தேவரீர் கொடுக்க வல்ல வரில்லை. ஆதலால் சிரிக்கும்படி ஆயிற்று.... "

"யாமோ ஸர்வ வல்லபன். தேவ ரீர் கேட்கும் வரம் எதுவாகிலும் தந் தருளுகிறோம்!"

"அடியேனுக்கு இவ்விதமாய் எந்த வரம் வேண்டினும் தர இயல்வதாக பிரதிக்ஞை செய்து தர முடியுமா ஸ்வாமி?"

"அப்படியே! இது ஸத்யம்!..."

"அப்படியாகில் அடியேனை ஆசாரி யனாகப் பற்றி இந்த ஸத்ஸம்பிரதா யத்தில் ஈடுபடுகிற ஸகல சேதனர் களுக்கும் மோக்ஷ ஸாம்ராஜ்யம் தந் தருள வேணும்!......"

"அப்படியே ஆகட்டும்!" என்றார் நம்பெருமாள்.

பரமகாருணிகரான எம்பெருமா னாரின் பரம கிருபையாலே நமக்கும் நமக்குப் பிறகும் தோன்றவிருக்கிற ஸகல ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் முன் னதாகவே மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைப் பெற்றுத் தந்து விட்டது எம்பெரு மானின் பரந்த உள்ளம்! நம்முடைய பாபங்களைத் தீயினில் தூசாக்கி இந்த மோக்ஷ ஸாம்ராஜ்யம் பிராப்தியானது எம் பெருமானாரின் திவ்ய கருணை கடாக்ஷத்தால் மட்டுமே! எம்பெரு மானாரை ஆசாரியராகக் கொண்டு பிரபத்தி மார்க்கத்திலீடுபட்ட யாவ ருக்கும் இந்த ஆசாரியாபிமானமே 'உத்தாரக'மாயிற்று. இதில் நாம் சற்றுக் கூர்ந்து கவனிக்க வேண்டியது நம்முடைய பாபங்களைத் 'தீயினில் தூசாக்கும்' தன்மை இந்த ஆசாரி யனுக்குத்தான் உண்டு என்றும் இந் தப் பாபங்களைத் தாம் சிரமேல் தாங் கிக் கொண்டு தம் சிஷ்யனை உஜ்ஜீவிக் கப் பண்ணுகிற பரம தயாசிந்துவாக ஆசாரியன் விளங்குகிறார் என்பதே!

எம்பெருமான் தன் திருவடிகளில் வந்து சரணடைந்தவர்களுக்குத்தான் மோக்ஷ ஸாம்ராஜ்யம் தருவேன் என் றான். ஆனால் ஆசார்யனோ தன்னைச் சரணடையாதவருக்கும், அவர்கள் பாபங்களைத் தாம் ஏற்றுக்கொண்டு அந்த மோக்ஷத்தை வாங்கித் தரு கிறான்! ஆகவே எம்பெருமானைவிட உயர்ந்தவர் ஒருவர் உண்டு என்றால் அவர் நம்முடைய ஆசாரியரே என் பது ஸம்பிரதமாயிற்று!



# அருளும் பொருளும்

இவ்வுலகில் மக்களாய்ப் பிறந்த யாவரும் இன்பத்தைத் துய்க்கவே விரும்புகின்றனர். அதன் பொருட்டுத் திரைகடல் ஓடியும் திரவியம் (பொருளை) தேடிவருகின்றனர். இன்பத்திற்காகவே வாழ்கின்றார்கள். அந்த இன்பத்தைப் பெறுவதன் பொருட்டே பொருளைச் சேமித்தும் வைக்கின்றனர்.

இன்பத்தில் இருவகை உண்டு. ஒன்று துன்பம் கலந்த இன்பம். அதாவது, இன்பத்தில் ஆரம்பித்துத் துன்பத்தில் முடிவடைவது. இத்தகைய இன்பமே சிற்றின்பம் எனப்படுவதாகும். பொருளால் நாம் அடையும் இன்பம் இதுவேயாகும். இஃதன்றி துன்பம் கலவாத 'பேரின்பம்' ஒன்று உளது. இவ்வின்பத்தையே திருவள்ளுவர் "அறத்தான் வருவதே இன்பம்" எனக் குறிப்பிடுகின்றார்.

அறத்தால் வருமின்பத்தை ஒருவன் பெறுதல் வேண்டின், அவனுக்குப் 'பொருள்' மிகவும் அவசியமாகின்றது. இப்பொருளின் தன்மையைத் திருவள்ளுவர்,

"கூத்தாட்டு அவைக் குழாத்தற்றே
பெருஞ்செல்வம்
போக்கும் அது விளிந்தற்று"

என்கிறார்.

ஒருவனிடத்து வரும் பெரிய செல்வம் கூத்தாடுதல் செய்கின்ற அரங்கின்கண் காணப்போன குழாம் வந்தாற்போலாகும். கூத்து முடிந்தவுடன் வந்தவர்கள் போயின்றபோல செல்வமும் செல்வமும் போவது தெரியாமல் மறைந்துவிடும் என்பதே மேற்கூறிய குறளின் கருத்தாகும்.

'செல்வம்' என்பது சென்று கொண்டே இருப்பதாகும். ஓரிடத்தில் நில்லாத தன்மை உடையது. மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்த திருமூலர் செல்வத்தின் தன்மையை,

"மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே
கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லுங்
கலம் போல"

என்று கூறுவதும் சாலப் பொருத்தமுடையதே ஆகும். ஆம்! செல்வமானது உடனே கவிழும் நீர்மேல் செல்லும் படகு (கலம்) போன்றதே ஆகும்.

இத்தன்மைத்தாய செல்வம், வானத்தில் இயங்குதலைப் பொருந்திய நிலவு நிலைத்து நில்லாமல் இருட்பிழம்பு போல்வதாகி விடுகின்ற துன்பநிலையை உடையது என்பதைச் சொல்லவும் வேண்டியதில்லை என்கிறது திருமூல மந்திரம்.

"இயக்குறு திங்கள் இருட்பிழம்பு
ஒக்கும்
துய்க்குறு செல்வத்தைச் சொல்லவும்
வேண்டா"

நிலையில்லாமல் சென்று கொண்டே இருக்கும் இயல்புடைத்தாகிய இச்செல்வம் துன்பத்தையும் கொடுக்கும் என்பதை இதனால் அறிகின்றோம். மிகுந்த செல்வத்தினால் வரும் கேடுகளை அறியார் யார் உளர் இவ்வுலகில்? இச்செல்வத்தால் அன்றோ ஆண்டவனது படைப்புக்களில் அற்புதப் படைப்பான மானுடம் வீணே கொலை செய்யப்படுகின்றது!

இத்தகைய செல்வத்தின் இழிநிலையை அருணகிரிநாதரும் கந்தர் அலங்காரத்தில்,

"வெய்யிற்கு ஒதுங்க உதவா உடம்பின்
வெறு நிழல்போல்
கையிற் பொருளும் உதவாது காணுங்
கடைவழிக்கே"

என அருளியுள்ளதை ஓர்ந்து உணர வேண்டும். நமது உடலின் நிழல் நமக்கு உதவாதது போல, நம் கையில் உள்ள பொருளும் கடை வழிக்கு— இறந்த பின் உடன் வருவதில்லை.

இதை நன்கு உணர்ந்த குலசேகர ஆழ்வாரும்,

"ஆனாத செல்வத்து அரம்பையர்கள்
தற்சூழ
வான் ஆளும் செல்வமும் மண்-
அரசும் யான் வேண்டேன்"

என்று அருளியது சாலப் பொருத்தப்பாடுடையதே ஆகும்.

இவ்வாறு நிலையில்லாத் தன்மை உடையதும், கடைவழிக்கு — மறுமைக்கு உதவாததும், துன்பத்தைத் தரும் தன்மை உடையதுமான செல்வத்தைப் பெற்ற நாம் யாது செய்ய வேண்டும்? இத்தகைய பொருளைக் கொண்டே அருளைப் பெறுவது எவ்வாறு? என்பனவற்றை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

இந்து மதத்தின் இரு கண்களாகத் திகழ்வன சைவமும் வைணவமும். இவ்விரண்டிற்கும் "சட்ட நூல்" எனப்பாராட்டப்பெறும் (*Law Book of Hindu Religion*) திருக்குறளைக் கொண்டே மேற்கூறியவற்றுக்கான வழிகளைக் காணலாம்.


**திரு ஏ. பக்தவச்சலம்,**
குடியேற்றம்


அயல் நாட்டிற்குச் செல்லும் ஒருவன் வங்கியின் (*Bank*) உதவியால் இந்நாட்டுப் பணத்தைத் தான் செல்லும் நாட்டிற்கு உரிய பணமாக மாற்றிக் கொள்ளுகிறான். இதைப் போல நிலையில்லா இப்பொருளை வள்ளுவர் கூறும் வங்கியின் உதவியால் அருளாக மாற்றிக் கொள்ளலாம். இவர் கூறும் வங்கியில் பொருளைச் சேர்த்து விட்டால் அப்பொருளானது நிலைத்து நின்று நமக்கு இன்பத்தையும் கொடுக்கும்; உற்ற துணையாக மறுமைக்கும் உதவும். அந்த வங்கி "ஏழைகளின் வயிறு" என்பதே ஆகும்.

அற்றார் அழிபசி தீர்த்தல்
அஃதொருவன்
பெற்றான் பொருள் வைப்புழி

இக்குறளில், பொருள் பெற்ற ஒருவன் தனக்குப்பின்னுல் (மறுமையில்) உதவும் பொருட்டு சேமித்து வைக்குமிடம் (Bank) அற்ருர் அழிபசி தீர்த்தலே ஆகும் என்பதை வள்ளுவர் அறுதியிட்டுக் கூறியுள்ளதைக் காணலாம்.

பசியானது ஒருவனுடைய மானம, குலம், கல்வி, வணமை, அறிவுடைமை தானம், தவம், முயற்சி, தாளாண்மை முதலிய நற்குணங்கள் யாவற்றையும் அழித்து விடும தன்மை உடையதாகையால், அதை 'அழிபசி' எனருர் வள்ளுவப் பெருந்தகை.

இத்தகைய அழிபசி எனனும் தீயானது, ஏழைகளின் வயிற்றைப் பற்றி அவர்களின் உயிரை அழிக்க முற்படும்போது பொருளைப் பெறறவன அத்தியை உணவு கொணடு அழித்தல் வேணடும். இதுவே பொருள் பெற்ருன் தன் பொருளை அருளாக மாற்றிக் கொள்ளும் வழியாகும்.

ஒருவனுக்கு விழுத் துணையாவது அறமேயாகும். அறம் என்பது மன்னுயிர்க்கு உணடியும், உடையும், உறையுளும் வழங்குவதே ஆகும் என்று மணிமேகலை அறுதியிட்டுக் கூறுவதைக் காணலாம.

பாடல் :-

இளமையும் நிலலா யாக்கையும் நிலலா
வளவிய வான பெருஞ் செலவமும நிலலா
புத்தேள் உலகம் புதலவரும தாரார்
மிக்க அறமே விழுத்துணை ஆவது
அறமெனப படுவது யாதெனக் கேட்பின
மறவாது இது கேள, மனனுயிர்க கெல்லாம
உண்டியும் உடையும உறையுளும
அலலது கண்டது இல
—மணிமேகலை

'அறம்' என்பது யாது? என்று வரையறை செய்யும் போது, மன்னுயிர்க்கெல்லாம் உண்டி அளிப்பதை—அழிபசி தீர்ததலை முதலில் வைத்துக் கூறியிருப்பதை நாம் கருததில் கொள்ளவேண்டும். இத்தகைய அறத்தைச செய்யும்—அழிபசி தீர்த்தலைச் செய்யும் அருளாளர்கள் இருளறு சிவகதியை எளிதில் எய்துவார்கள் என று யாப்பருங்கல்விருத்தியும் கூறுவதைக் காணலாம்.

பாடல்:-

நிலலாது செல்வம் நிலலார் உடம்படைந்தார்
செல்லாதொருங்கென்று சிந்தித்து—நல்லார்
அருளுளம் புரிகுவராயின்
இருளறு சிவகதி எய்தலோஎளிதே
—யாப்பருங்கலவிருத்தி

தேவைக்கு மிஞ்சிய பொருளை அருளாக மாற்றிக கொள்ள வேணடும். எங்காயினும் வரும் ஏற்பவர்க்கிட்டது என்பது ஆன்ருேர் வாக்கு. இதற்கு இரவு, பகல் என்ற நேரமில்லை, சாதி மதபேதமில்லை. ஆம்! ஏழைகட்குப் பொருளைப் உதவி அருளைப் பெறுவதற்கு காலநேரம் ஏது?

அருளின் மேன்மையையும், பொருளின் கீழ்மையையும் வள்ளுவர் ஒரே குறட்பாவில் கூறியுள்ளதை நாம் நினைவிற்கொள்ள வேண்டும்.

''பொருள் அறருர் பூப்பர் ஒருகால
அருள் அறருர்
அற்ருர் மற்ருதல் அரிது''

பொருளை இழந்தால் மீண்டும் பெற வாய்ப்பு உண்டு. ஆனுல் பொருளை அருளாக மாற்ற மறந்து அருளற்றவர்களாகி விட்டால், அளவிலாத் துன்பமே நம்மைச் சேரும்.

எனவே உடன் வாராத் தன்மையைப பெற்ற பொருளை, அடுத்து வரும் பிறவிகட்கும் உதவும் அருளாக மாற்றிப் பயனடைவோமாக!



## "மாவினை மாய்விக்கும் பாதம்"

திரு. T. நவநீத கிருஷ்ணன்—போடிநாயக்கனூர்.

மல்மறு யென்மனத் தாழி மிசையோர்
நலமுறு எண்ணத் தரவுத் — தலமென
ஒணணமணி வோர்ந்தவெம் நாரணன் பூம்பதம்
உண்ணீராம் எந்தை உயிர்க்கு!

உயிாக்கு வுயிரான் உணர்வறிய எம்மான்!
துயிலத் தடமன மோர்ந்தான்—மயில் வண்ண
வணணத்தான் நாரணன், எங்கோன் பதமலர்
எணுணத்தான் தித்திக்கு மாங்கு

ஆங்காய்ந தளநதோர்ந்தா ஞயா மடமனத்தே
ஈங்கோத வொன்றிலலே யென்செய்வேன்?— வீங்கோதக்
கோனுன் குலநாதன்! நாரணன் நீள்பதம்
ஊனி னுயிரா மெமக்கு.

எமக்காறே, வொண்ணுமம் நாரா யணவே!
அமரர்க்கு மஃதே யறியாய்—அமர்ந்து
மடமனத் தோங்கி யளந்தபாதம் மாயா
அடுவினை மாய்விக்கு மீங்கு!

ஈங்குக் கனியாய், கனிசே ரிரதமாய்,
தாங்குஞ் சுவையாய்த் தனித்தனி—பாங்கனுய்
பூவுயிர்க்கு மைம்பூதத் தானுன் பதமலரால்
மாவுடற் பந்த மறும்.

# ★ மஹான் தொட்டாசார் சுவாமிகள் ★

சோளிங்கபுரம் என்றதும் ஸ்ரீ யோக நரசிம்மர், ஸ்ரீ யோக ஆஞ்ச னேயர் திருக்கோயில கொண்டுள்ள "திருக்கடிகை" அனைவர்க்கும் நினை விற்கு வரும். அத்திருப்பதியில் பதினாறும் நூற்றாண்டில் தோன்றிய மஹான் ஒருவர் வாழ்நது வந்தார். அவர்தாம் ஸ்ரீ சுவாமி தொட்டா சார் என்றும் மஹாசார்யர் என்றும் புகழப் பெறுபவர்; மஹா பக்தி மான்; ஆச்சார சீலர். காஞ்சீபுரம் ஸ்ரீ வரதராஜஸ்வாமியிடம் அள வில்லா பக்தி பூண்டவர்.

நாலாயிர திவ்யப்ரபந்தத்தில "அக்காரக்கனி" என்று புகழப்பெற் றும், "குருபரம்பரா ப்ரபாவம்", "விச்வ குணதர்சம்" போன்ற நூல்களில் போற்றப்பெற்றும் விளங் கும் இந்தக் கடிகாசலம் அருகி லுள்ள கொண்டபாளையம் என்ற மலையடிவாரத்துக்குச் செல்லும் பாதையில் முதலில் எதிர்ப்படுவது "தக்கான்குளம்" என்ற பிரம்ம தீர்த்தம்.

பொழுது விடிந்தால் காஞ்சியில் வரதனின் கோலாகலமான கருட சேவை! எந்த ஆண்டும் தவறாமல் அவனைத் தரிசிக்கும் பேறு பெற்ற, ஸ்ரீ சுவாமி தொட்டாசார்யருக்கு ஒரு தடவை இடைஞ்சல் ஏற்பட் டது. காஞ்சி நோககித் தக்கான் குளம் வழியே ஓடுகிறார் அந்தப் பெரியவர்; மூச்சுத் திணறுகிறது, உடம்பெல்லாம் வியர்வை சொட்டு கிறது, அதோடே களைப்புடன ஓடு கிறார். ஆனால், பொழுது புலர்ந்து விட்டது.

மிக்கச் சோர்ந்து போய், "வரதா! இதுவும் உன் சோதனையோ? என்று நினைவற்றுச் சாய்ந்து விடுகிறார்! கருணாமூர்த்தி கைவிடுவானா? அதே நேரம காஞ்சியில் காட்சியளித்த கருடாரூடன் இந்தக் குளத்தருகில் பக்தருக்குச் சேவை சாதித்தான். அதனைக குறிக்கும் வணணம் காஞ்சி புரத்தில் வைகாசி மாதம் நடை பெறும் பிரம்மோற்சவத்தில் வரத ராஜர் கருட வாகனத்தில் புறப்பட் டுக் கோயில் கோபுர வாயிலுக்கு எழுந்தருளும்போது, குடை தாழ்த் தப்பெற்றுக் கர்ப்பூர ஹாரத்தி காட்டும் வழக்கம் இன்றும் நடந்து வருவது கண்கூடு.

இதனைத் தொட்டாசார் சேவை என்றே அங்குள்ள பெரியோர் கூறக் கேட்கலாம்! சோளிங்கபுரம் தக் கான் குளக்கரையில் இதனை நினைவு கூறும் வகையில் தோன்றிய வரத ராஜர் கோயில் உள்ளது. வரத ராஜர் கருட வாகனத்தில் அற்புத மாகக் காட்சியளிப்பதையும், இராமானுஜர், தொட்டாசார் மூர்த்திகளையும் இன்றும் கண்ணாரக் கண்டு அருள் பெறலாம்.

விஶிட்டாத்துவைதத்தை நிலை நாட்டிப் பரப்பிய பெருமை எம் பெருமானார் என்னும் இராமானுஜ ரைச் சாரும்! அவர் தம் மருமகனார் முதலியாண்டன். இராமானுஜர் துறக்கும்போது முதலியாண்டானைத் துறவாது தம் பாதுகையாகவும் திரி தணடமாகவும் ஏற்றுக் கொண்டார். அதனால் முதலியாண்டானின் திரு வமசம் தனிச் சிறப்பு பெற்றது. ஸ்ரீ மணவாள மாமுனிகள் கரு ணைக்கு இலக்காகி, மேலும் ஏற்றம் பெற்றது. மணவாள மாமுனிகளை 'ஏராரும் எதிராஜர் என உதித் தான் வாழியே!" என்று பின்புள் ளார் போற்றிப் புகழ்ந்தனர். 'பொய்யிலாத மணவாள மாமுனிகள் போற்றிப் புகழ்ந்த தாசரதி திருக் குலத்தில், மீட்டும் ஒரு இராமானு ஜரோ', என்று பிற சமயிகள் அஞ் சிட "ஆசில் எதிராஜர் நிகரான" குருவாகத் தொட்டாசார் ஒரு சுபக் கிருது வருஷம் மாசி மாதம் திரு உத்திராட நாளில் அவதரித்தார். ஆங்கிலக் கணக்குப்படி இவரது தோற்றம் 1-2-1543 ஆகும் என் பது குறிப்பு.

இம்மஹான் ஸ்ரீ அப்பைய தீக்ஷித ரின் காலத்தவர். அவரோடு தரிச னப்போர் நிகழ்த்தும்போது தாம் தோல்வியுறுநிலை அடைந்து நிற்கும் நாள் இரவில் வேதாந்த தேசிகன் இவர் கனவில் தோன்றி சில கருத் துக்கள் எடுத்துரைத்ததாகவும், அவற்றைக்கொண்டு மறுநாள் தீக்ஷி தரை வாதத்தில் வென்றதாகவும்

---

"சன்மிஷ்டை"

---

கர்ண பரம்பரைச் செய்தியொன் றுண்டு:

மஹாதேசிகனின் "சததூஷணி" என்னும் வேதாந்த நூலுக்குத் தொட்டாசார் "சண்ட மாருதம்" என்ற பெயரில் விபுலமான வியாக்கி யானம் இயற்றியுள்ளார். இது தீக்ஷிதரின் "அத்வைத தீபிகா" நூலிற்குக் கண்டன நூலாகும். தொட்டாசார் பிரம்மசூத்திரம் பொருளை விளக்கும்வகையில் "பாரா சார்ய விஜயம்" "ஸத் வித்யா விஜ யம்" முதலான ஐந்து விஜய நூல் களையும் வடமொழியில் அழகாக இயற்றியுள்ளார். அவைப் படிப் பதற்கு மிக்க இனிமையாயுள்ளன.

இவ்வாறு இராமானுஜ தரிசனத் தினை நிலைநாட்டி, அதனைப் போற் றிப் பாதுகாக்கவல்ல விஜய நூல்களை யும் எழுதியதல்லாமல், சோளிங்க புரத்தில் பெருமாள் கோயில்களை நன்கு புதுப்பித்து முதல் மரியாதை

பெறும் ஸ்தல ஆசாரியபுருஷருமா ஆனார்.

தில்லை சிதம்பரத்தில் கோவிந்த ராஜப்பெருமாளை மீட்டும் திருப் பிரதிஷ்டை செய்வித்த பெருமையை யும் உடையவர் இம் மஹான். இது 1599-ல் நடைபெற்றது. பிமெண்டா என்னும் போர்த்துகீசிய பாதிரி யார் அந்நாளில் இதனைக் கண்டு தில் லையில் சைவ-வைணவம் பூசல் பற்றிய போப்பிற்கு எழுதிய குறிப்புகளி னின்று இதனை நன்கு வலியுறுத்து கிறது

சோளிங்கபுரம் எம்பெருமான களுக்கு நித்தியோற்சவம் முதலான வற்றைக் குறைவற நடத்துவதற் குரிய அனைத்து ஏற்பாடுகளையும் செய்தவர் இம்மஹான் இவர் திரு மலை—திருப்பதி திருவேங்கடமுடை யானையும் நேரில் கண்டு உரையாடும் பெருமையுடையவராகத் திகழ்ந்த இம்மஹாசார்யர் ஸ்ரீமுஷ்ணத்தில் ஒரு பிலவங்க வருஷம் ஐப்பசி மாத கிருஷ்ணாஷ்டமியில், அதாவது 3-10-1607ல் ஸ்ரீவைகுண்டமேறினார் என்பர் பெரியோர்.

''யதீந்திர மத தீபிகா'' ஆசிரியர் இவருடைய பிரதம சீடர்; விஸிட் டாத்துவைத கருத்துக்களைத் தெள் ளத் தெளிவாக அறிந்து, எல்லோ ரும் நன்கு புரிந்து கொள்ளக்கூடிய வகையில் இந்நூல் பெரிதும் உதவு கிறது இவர்போல் எண்ணற்றோர் தொட்டாசார் திருவடி நிலையில் பல நூல்களை எழுதிப் போற்றியுள்ளதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

இங்கு நூற்றெட்டுக்கு மேற்பட்ட தீர்த்தங்கள் உள்ளன. தீர்த்தம் என்பது பாறையில் மூலிகைச் சத்து நிரம்பிய நீர்த்தேக்கமே! இந்த மலை யில் சஞ்சீவிகரணி, விசல்யகரணி, சந்தானகரணி என்ற மூலிகைகள் வளர்வதால், இங்கு வரும் பக்தர் களின் உடல் நோய், மனநோய் போன்றவற்றில் தீராதவை என்று கருதப்படுவை கூடத் தீர்கின்றன.

பெரிய மலையில் குடியிருப்பவர் யோக நரசிம்மர்; சிறிய மலை ஆஞ்ச நேயரின் வாசஸ்தலம். இரு மலை களின் மீதும் ஏற நல்ல படிகள் அமைக்கப்பட்டுள்ளன. பெரிய மலையில் முதலில் அமிர்தவல்லித் தாயார் சந்நிதி; பின்னால் உள்ளது யோக நரசிம்மா சந்நிதி. ஸ்ரீவேங்க டேசப்பெருமானுக்கு இவர் தனயன் என்று உறவு கொண்டாடி இம்மலைக் கும் 'திருமலை' என்று பெயரிட்டு விட் டார்கள். ஸ்ரீராமர், ரங்கநாதர் சந் நிதிகள் கொண்ட ஆஞ்சநேயர் மலை யின் உயரம் சுமார் இருநூறு அடி களே என்பது குறிப்பு. மேலே உள்ள ஹனுமன் தீர்த்தத்தில் குளிப் பதற்கு மிகக வசதியுள்ளது

''அரிசரணபரன'' என்று காசக் குடி பட்டயத்தில் போற்றப்பட்டி ருப்பவன் இரண்டாம் நந்திவர்மன் கி பி. 710-755ல அரசாண்டவன். இவன் காலத்தில் திருமங்கையாழ் வார் இந்தக் கோயிலைத் தரிசித்து மனமுருகி, ''உய்ந்து போனேனே'' என்பதால் இக்கோயிலின் மகி மையை எளிதில் உணரலாம்! ★

# சண்டிகேஸ்வரர்!

**'மயூரப்ரியா'**

சிவாலயங்களில் எல்லாம நாம் சண்டிகேஸ்வரர் சந்நிதியைக் காணலாம்! 'சண்டேசர்' என்பது சிவ கணங்களில் ஒரு பதவி. திரு வாய்ப் பாடியில் பிறந்த விசாரசருமர் என்பவரைப் பரமேஸ்வரன், இப் பதவியில் அமர்த்தினார். சிவாலயத்தில வந்து வழிபடுவோர்க்கு வழி பாட்டின் பலனை ஊட்டுவிக்கும் அதிகாரமுடையவராதலின், நாம் வழி பாட்டின் பலனைப் பெறுவதற்காகவே சண்டேசரையும் வழிபடுகிறோம்! இவர், எந்த நேரத்திலுமே சிவத்யானத்திலேயே தோய்ந்திருப்பவரா தலால், தியானத்திலிருந்து கலைத்து வழிபடுவதற்காகவேதான் நாம் கையைத் தட்டுகிறோம! இதுபெரும் பிசகு! இவரைச் சிலர் 'செவிட்டுச் சாமி' எனவும் கருதி, பலமாகவே கையைத் தட்டுகிறார்கள்! அஞ் ஞானம் தவிர வேறில்லை! இவர் செவிடரல்லர்! நிஷ்டாபரர்! நமது கவலையினால் இவரது நிஷ்டையைக் கலைக்க முற்படுகிறோம்!

ஆதலால், கையைத் தட்டலாகாது! நிஷ்டையைக் கலைத்த அப சாரமும் வேறு வந்து சேரின், சிவ வழிபாட்டுப் பலனும் கிட்டாது நமக்கு! சிவனாரிடமிருந்து விசாரசருமர் உண்ட கலமும், உடுப்பனவும், சூடுவனமும் பெற்று 'சண்டேசர்' என்ற பதவியும் பெற்றவர்! சிவனுக்கு மகனுமாவார்! சிவ சந்நிதியில் நிஷ்டை கூடி, சிவத்தையே சிந்தித்துக் கொண்டிருக்கிறார்! 'சண்டி' என்றால் பாதுகாப்போன் Custodian-Trustee) என்று பொருள்படும்! சண்டிகேஸ்வரர் தான் சிவன் கோவி லின் டிரஸ்டி (Trustee)!

சிவனார், தன் மாலையை அவர் முடிமேல் சூட்டி, திருவடி தீட்சை தந்து, 'நீ இனி சண்டியல்ல! சண்டேசன் ஆவாய்! ''என்று அருள் பாலித் தார்.' இதிலிருந்து சண்டிகேஸ்வரரின் பெருமை விளங்குகின்றதல்லவா? எனவே சண்டிகேஸ்வரர் ஸந்நிதியில் கைதட்டக் கூடாது! மீறின், பெருத்த அபசாரமாகும்! மௌனமாக இவரைத் தரிசித்தாலேயே திரு வருள் பூரணமாகக் கிடைக்கும்.

'' லக்ஷ்மீநாத ஸமாரம்பாம நாதயாமுன
மத்யமாம
அஸ்மதாசாாய பாயநதம வந்தே
குருபரமபராம் ||
ராமாநுஜ தயாபாதரம ஞான
வைராக்ய பூஷணம
ஸ்ரீமத் வேஙகடநாதாாயம வந்தே
வேதாநத தேசிகம் ||
ஸ்ரீசைலேச தயாபாதரம தீபகத்யாதி
குணார்ணவம்
யதீந்தர பரணவம வநதே ரம்யஜா
மாதரம முனிம ||

ஸ்வாமி தேசிகன் மகிமையை மற்ற வர் உணராத போதே, அதாவது மிக பால்யமாக இருக்குமபோதே அவரைப பாாதத மாதரததிலே யே, அநுக்ரஹம் செய்து, 'சாகாசசரித திரம் படைகக உளள வரலாற்று புருஷனாக இவர் விளங்கப் போகிறார்' என்று திருவாய் மலர்நது ஆசி வழங் கியவர், ஸ்ரீமந நாராயணனாலேயே 'அமமாள்' எனறழைககப் பெறும சிறப்பைப பெற்ற 'நடாதூர் அம் மாள்' எனும நடாதூர் வரதா சார்யர்.

பால்யத்திலேயே தாய், தந்தை இருவரையும் இழந்து, உறவினரால் வளர்க்கப் பெறறு பிறகு முறையாக வேத அத்யயனம் செய்யப் பாடசாலை யில் சேர்ப்பிக்கப்பட்டு, 'விம்ச த்யப்தே விச்ருத நாநாவித வித்ய:' என்று ஸங்கலப ஸூர்யோதயத்தில் ஸ்வாமி தேசிகன் சாதித்தபடி வேதாத்யயனம் மட்டுமல்லாது வேதாஙகங்களிலும கரை கண்ட வராய விளங்கினா. ஸாமுத்ரிக லக்ஷண சாஸ்த்ரம, ஜ்யோதிஷ சாஸ்

# வைணவச் செம்மல் நடாதூர் வரகவி

அறத்தின் வழியால் இறைவனைக காண்பவன் வைணவன். தொண்டர்க் கும் தொண்டனாய்த் திகழ்பவன் வைணவன், அனைத்து உயிர்களிடத் தும் அநத ஆண்டவனாகிய ஸ்ரீமந் நாராயணனைக் காண்பவன வைண வன். ரகசியதரய தத்வார்த்தத்தை உணர்ந்து ஒழுகுபவன் வைணவன். இந்த வாழ்க்கை நெறியை உணர்த்து வதே வைணவம். இந்த வைணவ நெறியை வையத்துக்கு உணர்த்திய ஆசார்ய ஸாரவ பௌமரில் ஸ்வாமி தேசிகன் குறிப்பிடத் தக்கவா.

புரட்டாசித திருவோணத் திரு நாளில் திருவேங்கடமுடையானின திருமணியாழ்வாரே ஸ்வாமி தேசி கனாகத் திருஅவதாரம் செய்தார் என்று ஸப்தரத்ன மாலிகா கூறு கிறது. ஸ்வாமிகளே அருளிய ஸங கல்ப ஸூர்யோதயத்திலும் இது பற்றிய குறிப்பு வருகிறது.

ஸ்வாமி தேசிகன் இன்றைக்குச் சுமார் 715 ஆணடுகளுக்கு முன அவ தரித்தவர். அதாவது இப்போது கலியுக வருஷம் 5085 ஆகிறது. சாலீவாஹன சகவருஷம் 1906 நடக் கிறது. ஸ்வாமி தேசிகன கலி 4369ல், சாலி வாஹன சகாப்தம 1190ல் ஆங்கிலக் கணககுப்படி 27-9-1268ல் அவதாரம் செய்தவர்,

'' யோ பால்யே வரதார்யஸ்ய
ப்ரசார்யஸ்ய
பராம் தயாம் அவாப்ய வருததிம
கமித ''

(எவர் பாலயத்தில் வாத்ஸ்ய வர தாசார்யர் என்ற நடாதூர் அம்மா ளின் அனுக்ரஹத்திற்குப் பாத்ரராகி வ்ருத்தியை அடைந்தாரோ - ஸ்ரீவே தாந்த தேசிக மங்களா சாஸன ஸ்தோத்ரம்-6-என்கிறபடி) ஸ்வாமி தேசிகனாகிய அவதார புருஷரை, அகிலத்துக்கு அடையாளம் காட்டிய வைணவப் பெரியாராகிய நடாதூர் அமமாள் ஸ்ரீமந நாராயணனின் கைங்கர்யமே தன் ஜீவியத்தின லக்ஷ் யம் என வாழ்நதவர். அந்தப் புண ணிய புருஷரின வம்சமாகிய 'நடா தூர் குலததில், ஸ்ரீவத்ஸ கோத்ரத் தில் ஸ்வாமி தேசிகன் திருவவதாரம் செய்த திருவோண நக்ஷத்ரத் திரு நாளிலேயே புதுவை முத்துரங்க சேஷாசல செட்டி அக்ரஹாரத்திலே இன்றைக்கு 85 ஆண்டுகளுககு முன் னால், அதாவது 19-8-1899ல் நடா தூர் ஸ்ரீ உ வே ஸ்ரீநிவாஸாச்சாரி யாரின் குமாரராகிய ஸ்ரீ உ. வே. ஸுந்தர வரதாச்சாரியாரின் இரண டாவது புத்ரராக 'நடாதூர் வரகவி' எனப் பின்னால் பெருமபுகழ் ஈட்டிய ஸ்ரீ உ. வே. வேங்கடாச்சார்யர் ஜனித்தார்.

த்ரம் போன்றவற்றில் நிபுணத்வம் பெற்ற நடாதூர் வரகவி வேங்கடாச் சார்ய ஸ்வாமி, நினைத்த க்ஷணமே ஸம்ஸ்க்ருதத்திலும், தமிழிலும் தங்குத் தடை இல்லாமல் கவி மழை பொழியும ஆறறல் கைவரப் பெற் றார். அதே போல தர்க்க, வ்யா கரண, மீமாம்ச பணடிதராகவும

ஜோதிஷ விசாரதை
வி பிச்சையம்மாள்
பாணடிச்சேரி.

சிறப்பெய்தினார். புதுவை மாநில ஸ்ரீ வேதாந்த தேசிக ஸபாவின் தலை வர் பதவி இவரைத் தேடி வந்தது.

'ஆசுகவி, சித்ரகவி, வரகவி, கவி முகில்' போன்ற பட்டங்களும், பரி சில்களும் தாமாக இவரை வந்தடைந் தன. பகவானுடைய தசாவதாரங் களில மிகவும த்வரையுடன் பக்தர் களை ரக்ஷித்தது ஸ்ரீ நருஸிம்ஹாவ தாரததில்தான் என்று பெரியவர் கள் சொல்வாாகள். அந்த நரசிம்ம க்ஷேத்ரம் எனப்படும் தலமான, ஆந் திர ப்ரதேசத்திலுள்ள நந்தியாலுக்கு அணமையில் சிங்கவேள் குன்றம எனப்படும் 'அஹோபிலம்' என்ற ஸ்ரீ நரஸிமஹப் பெருமாள், லக்ஷ்மி நாச்சியார் திருக்கோயிலில் கைங் கர்யம் செய்ய வேண்டும் என்ற தணி

யாத ஆவலில், எந்தவித வசதியுமில்லாத பாம்புகளும்,வனவிலங்குகளும் சர்வ சாதாரணமாய் சஞ்சரிக்கும் நிலையில் ஜன நடமாட்டமே இல்லாத அந்தக் காலத்திலேயே அஹோபிலத்துக்குத் தாமாகவே வேண்டி விரும்பி கோயில் கைங்கர்யத்துக்காக அங்கு மலையில் தனியே சென்று தங்கிருந்து பணியாற்றினர் நடாதூர் வரகவி ஸ்வாமிகள். ஆந்திர மண்ணில் அண்ணலின் சேவையில் ஈடுபட்டுத் தங்கிய காரணத்தால் அழகுத் தெலுங்கிலும் அபார பாண்டித்யம் பெற்றார். ஆள் அரவம் இல்லாத அஹோபில மலை வாழ்க்கையும், ப்ரஹ்மசர்ய நிலையும், அத்யயன விசேஷத்தால் கிடைக்கப்பெற்ற அபார ஞான வலிமையும் நடாதூர் ஸ்வாமிகளைத் தபோதனராகவும் மாற்றியது.

நடாதூர் வேங்கடாச்சார்யரை ஞானத் தபோதனராக ஆக்குவதற்காகவே அழைத்த மலை அஹோபிலம் என்பதே போல அஹோபில வாழ்க்கை இவருக்கு ஏராளமான மந்த்ர சித்திகளை வழங்கியது. அதோடு, ஆந்திர மாநிலத்தின் பூர்வ குடி இனத்தைச் சார்ந்த சீதாராம ராஜு, கேசவராஜு, பரமாத்மராஜு, ராதா கிருஷ்ணராஜு, ராமுடுராஜு போன்றோரின் நட்புப் பழக்கத்தால மூலிகை பற்றிய மர்மங்களையும், வைத்யமுறை பற்றியும் அறிந்து கொள்ளவும் இவருககு வாய்ப்புக் கிடைத்தது. பிற்காலத்தில், மிகச் சிறந்த சித்த வைத்யராக நடாதூா வரகவி ஸவாமிகள் திகழ்ந்ததற்கான அஸ்திவாரக்கட்டம் என்றுகூட இவரின் அஹோபில வாழ்க்கையைச் சொல்லலாம். அந்தக் காலத்தில் ஆந்திரத்திலும், தமிழகத்திலும் இவர் கலந்து கொள்ளாத வித்வத் சதஸ்களே இல்லை எனலாம். இப்படி பிறைமதியின் வளர்ச்சியைப் போல நடாதூர் ஸ்வாமியின் புகழ் பல்கிப் பெருகி வளர்ந்தது. இவரின் புகழ், அத்யயனச் சிறப்பு, கைங்கர்ய பராய்த் திகழும் எளிமையின் உயர்வு இவை அனைத்தையும் அறிந்த பலர் தங்கள் ஊரையே வாசஸ்தலமாகக் கொள்ள வேண்டும் என அழைப்பு விடுத்தனர். இப்படி வந்த விடாத அழைப்புகள் பலவற்றுள் (சுபானு வருஷம் தை மாதம் 25ம் தேதியன்று) புதுவை முத்தியாலுப் பேட்டையில் ஸதாபிதமான தென்கலை ஸ்ரீ ஸ்ரீநிவாஸப் பெருமாள் திருக்கோயில் அறங்காவலர்களின் அழைப்பு இவரை ஈர்க்க, மீண்டும் ஜனன ஸ்தலத்திற்கே வந்து சேர்ந்தார் திருக்கோயில் திருப்பணியுடன், தாம் கற்ற வைத்யம், ஜ்யோதிஷம், மாந்த்ரீகம், ஸம்ஸ்க்ருதக் கல்வி, தமிழ் மொழி, தெலுங்கு மொழி முதலியவற்றின் வாயிலாகவும் பொதுப்பணி புரிந்தார். இவரின் தன்னலம் கருதாச சேவையில் ஆழ்ந்த புதுவை முத்தியாலுப் பேட்டைப் பெருமக்கள் இவருக்கு "சித்த வைத்ய ஜோதிட மாந்த்ரீக சிகாமணி" என்ற பட்டத்தை வழங்கிக் கௌரவித்தார்கள். இவரின் கணிதச் சிறபபு, துல்லியமாகப் பலன் கூறும் பாங்கு முதலியவற்றால் ஈர்க்கப்பட்ட அந்நாளைய பிரான்சு நாட்டின் பிரதிநிதிகளாகிய புதுவை கவர்னர்கள் லூய்போன்வேன், ஆந்திரேமேனுர் போன்ற வெள்ளையர்களும், அவரைச் சார்ந்தவர்களும், அவர்களால் பாரீஸ் மாநகரில் வாழ்ந்த பலருமாகப் பல அன்னியர்கள், தகுந்த துவிபாஷிகளுடன், நடாதூர் வரகவி ஸ்வாமிகளிடம் அணுகி நம் ஹிந்து மதம பறறியும், குறிப்பாக வைணவ நெறி பற்றியும், சிற்பம், ஜ்யோதிஷம், ஆகமம போன்றவற்றைப் பறறியும் அளவளாவி நடபு கொணடனர். ஸ்வாமிகளின் அறிவார்ந்த புலமை செறிநத ஆக்கங்கள ஒவவொனறாக வெளிவரத் தொடஙகின. வைணவ ஆசார்யர்கள் அருளிய க்ரந்தங்களுக்கு நடாதூர் ஸ்வாமியின வயாக்யானங்கள் மிகச்ரேஷடமானவை. குறிப்பாக ஸ்வாமி தேசிகன ப்ரசாதித்த ஸ்ரீ அபீதிஸ்தவம; திருப்பதி திருமலை திருவேங்கடமுடையான் புகழ்பாடும் ஸ்ரீ தயாசதகம், ஸ்ரீ வைராக்ய பஞ்சகம், ஸ்ரீஸ்துதி ஆகியவைகளுக்கு நடாதூர் வரகவி ஸ்ரீ உ. வே. வேங்கடாச்சார்ய ஸ்வாமி அருளிய வியாக்யானங்கள் படிக்கும் தோறும் படிக்கும்தோறும் புதுத்தெம்பையும், புதுப்பொருளையும் அளிக்கவல்லன. இவைத் தவிர ஆயிரத்துக்கும் மேற்பட்ட கீர்த்தனைகளையும் இயற்றியுள்ளார். இதில் ஒரு விசேஷம், ஒவ்வொரு கீர்த்தனைக்கும் அவரே ராக தாளக் குறிப்புகளைக் கொடுத்திருக்கிறா. ஸங்கீதத்திலும் வல்லவரான நடாதூர் ஸ்வாமியின் மேற்படி கீர்த்தனங்களில் நூறு மட்டுமே அசசில் வந்துள்ளன. இதே போல ஸம்ஸ்க்ருதத்திலும் ஏராளமான ஸ்தோத்ரங்களையும், ஸ்லோகங்களையும், அஷ்டகம், பஞ்சகம் போன்றவைகளையும் இயற்றியுள்ளார். இவருடைய ஜோதிஷத் திறமையைக் கௌரவித்து பாண்டிச்சேரியின் முதல் கோடீஸ்வரக் குடும்பம் என்று கொடி போட்டுப் புகழ்பெற்ற கிறிஸ்துவ மதத்தைச் சார்ந்த சின்னையா எஸ்டேட்டினர் தங்களது ஆஸ்தான ஜோதிடராக இவரை அமர்த்திக் கொண்டு கடைசி வரை இலவச வீடு போன்ற வசதிகளைத் தந்து போற்றினர். ஆன்மீகம, இலக்கியம் இரு துறைகளிலும் சிறந்த பேச்சாளரும், கவிஞருமான நடாதூர் ஸ்வாமிகள் மஹாகவி பாரதியின் நணபர் என்பதுடன், நாட்டு விடுதலைக்காக அன்னிய ராட்சியை எதிர்ததுப் பாடல்களை முழக்கமிட்டவர், கதராடையை விரும்பி அணிந்தவர். சிறந்த வைதீகரான இவர், சமூக சீர்திருத்தப் பணிகளிலுமதன்னை ஈடுபடுத்திக் கொண்டவர் திடகாதரமான ஆரோக்யத்துடனேயே இருநது அநாயாசமாக 14-6-19·0ல் பரமபதம் எழுந்தருளிய நடாதூர் வரகவி ஸ்வாமி தமது கடைசி நாளை மிகத் துல்லியமாக வெகு காலம் முனனதாகவே எழுத்து மூலம எடுத்துரைததவர். அவரு

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில், திருச்சானூர்
## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | |
|---|---|---|---|
| 5-00 முதல் | 5-30 வரை | —சுப்ரபாதம | |
| 5-30 ,, | 6-00 ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-50 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) | |
| 6-00 | | —நித்ய அர்ச்சனை (வருடத்திற்கு ரூ. 150/- செலுத்தும் கிருஹஸ்தர்கள் பங்கேற்கலாம்) | |
| 6-15 ,, | 6-45 ,, | —சுத்தி—முதல்மணி | |
| 6-45 ,, | 1-00 மதியம் | —ஸர்வதரிசனம் | |
| 1-00 ,, | 1-30 ,, | —சுத்தி, 2-வது மணி | |
| 1-30 ,, | 7-00 இரவு | —ஸர்வதரிசனம் | |
| 7-00 ,, | 7-30 ,, | —சுத்தி, இரவு மணி | |
| 7-30 ,, | 8-30 ,, | —ஸர்வதரிசனம் | |
| 8-30 ,, | 9-00 ,, | —ஏகாந்தசேவை | |

காலை **வெள்ளிக்கிழமைகளில்**

| | | |
|---|---|---|
| 4-00 ,, | 4-30 ,, | —ஸர்வ தரிசனம் |
| 4-30 ,, | 5-00 ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-50 (நான்கு நபர்கள் அனுமதிக்கப்படுவர்) |
| 5-00 ,, | 5-15 ,, | —நித்ய அர்ச்சனை |
| 5-15 ,, | 5-45 ,, | —சுத்தி, முதல் மணி |
| 5-45 ,, | 7-00 ,, | —ஸர்வதரிசனம் |
| 7-00 ,, | 7-30 ,, | —சாலிம்பு |
| 7-30 ,, | 9-00 ,, | —தாயாருக்கு அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 ,, | 10-00 ,, | —அலங்காரம், 2வது மணி |
| 10-00 ,, | 8-00 இரவு | —ஸர்வ தரிசனம் |
| 7-00 ,, | 8-00 ,, | —கண்ணாடி மண்டபத்தில் ஊஞ்சல் சேவை. (ரூ: 150/-செலுத்தி பங்கேற்கும் இரு நபர்களுக்கு சுமார் 5 கிராம் எடையுள்ள வெள்ளிப் பதக்கம் வழங்கப்படும்) |
| 8-00 ,, | 8-30 ,, | —இரவு மணி |
| 8-30 ,, | 9-00 ,, | —ஏகாந்தசேவை |

## ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

I தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

| II ஆர்ஜிதம் | | | III சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ½ அளவு | ரூ. 55/- | (அ) நித்ய அர்ச்சனை (ஆண்டொன்றுக்கு) | ரூ. 150/- |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 50/- | (ஆ) ஸகஸ்ரநாமஅர்ச்சனை | ரூ. 6-50 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 40/- | (இ) அர்ச்சனை | ரூ. 1-00 |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 85/- | (ஈ) ஹாரத்தி | ரூ. 0-50 |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 65/- | (உ) பூராபிஷேகம் (வெள்ளிக்கிழமையில மட்டும) | ரூ 100-00 |
| (ஊ) தோசைப்படி | ,, | ரூ. 35/- | (ஊ) ஊஞ்சல் சேவை (வெள்ளிகிழமை மாலையில் மட்டும்) | ரூ.150-00 |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 90/- | (எ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஏ) ஸீரா | ,, | ரூ.155/- | (ஏ) யானை வாகனம் | ரூ. 32-00 |

* திருப்பதியிலிருந்து 3 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

டைய ஆக்கங்கள் பல இன்னமும் அச்சாகாமல் உள்ளன. ஸ்வாமிகளின் படைப்புகள் பவனி வருவது வைணவ உலகத்துக்கு மிகவும் ச்ரேயஸை வழங்கும். சிறந்த ஸ்ரீ வைஷ்ணவரின் வாழ்க்கை நெறி எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு நடாதூர் சித்த வைத்ய ஜ்யோதிஷ மாந்த்ரீக சிகாமணி ஸ்ரீ உ. வே. வரகவி வேங்கடாச்சார்ய ஸ்வாமிகளின் ஜீவிதம் ஒரு உதாரணமாகும். கடைசி வரை பொருட் செல்வத்தையும் ஈட்டியவர் நடாதூர் ஸ்வாமிகள் அவர் இயற்றியவைகளுள் ஒன்றே இந்த 'ஸ்ரீ தேசிகாஷ்டகம்'.

கவிதார்க்கிக ஸிம்ஹேந்த்ர கருணாகர
மானஸ
அதுநாத்வாம் நமஸ்க்ருத்ய ஸ்துதி
ஸ்தேக்ரிய தேமயா
ஸ்ரீமத் வேங்கட நாதார்ய ஸ்ரீசகண்
டாம் சஸம்பவ
காமக் ரோதவிநிர் முக்தம் யாவஜ்
ஜீவஞ்ச மாங்குரு
நபஸ்ய மாஸிச்ரோணயாம் அவதீர்ண
மஹாகுரோ
ஸமஸ்தஸா துப்ருந்தேமாம் ஸதா
வர்த்தயஸாத்விக
விச்வாமித்ர குலோத்பூத விச்வ
விக்யாதவைபவ
ஸதாஸ் மாகம் ஹயகரீவ ப்ரசாத
ப்ராப்திமாவஹ
ஸ்ரீஹஸ்திகிரி நாதஸ்ய க்ருபா பீயூ
ஷஸம்பத
த்வத்தர்சன ஸமுத்யுக்த மனோ
வ்ருத்திம்மமார்ப்பய
ஹயக்ரீவ பதாம்போஜே ஸன்யஸ்த
ஹ்ருதயாம்புஜ
ஸ்வயமேவ ஹரிம் ஸ்தோதும் மமவா
சமுதீரய
வடுரூபேண பூர்வம த்வாம யாசிதாய
தனப்ரத
படுதவம் வாக்ஸபுரத்வஞ்ச தேஹி
மஹ்யம் மஹாகுரோ
த்வயாக்ருதபரபநதாாத்தான க்ஞா
துமமே தேஹி கௌசலம்
ஸ்ரீயாச்லிஷ்ட ஹரோபத்திம் தேஹி
வேதாந்த தேசிக
நடாதூர் வேங்கடார்யேண க்ருதம ஸ்ரீ
தேசிகாஷ்டகம்
ஸதாபடதியோமர்த்ய: ஸமீபராப்னோ
திகுரோ: க்ருபாம்:
ஆசார்ய தேவோ பவ.



# கல்கி அவதாரம் எப்போது?

''1985-ல் கல்கி வருவார்'' என்று சுவாமி ஜகதீஸ்வரானந்தா ஒரு புத்தகத்தில் எழுதியிருக்கிறார். (ஸ்ரீ ராமகிருஷ்ண தர்ம சக்கரா-பேலூர்-மேற்கு வங்கம் வெளியீடு. ஆங்கிலம்) இதுவரை கல்கி அவதாரம் எப்போது ஏற்படும் என்று தகவல் எதுவும் இல்லை. ஆனால் இந்தப் புத்தகம் பல சுவடிகளைக் கொண்டு ஆதார பூர்வமாக எழுதப்பட்டிருப்பதால் அதிலுள்ள விஷயங்கள் இங்குத் தரப்படுகின்றன.

கிருஷ்ண பரமாத்மா பிறந்த வட மதுரையில் (மதுரா) இக்கல்கி ஓர் அந்தணக் குடும்பத்தில் பிறப்பாராம். கி. பி. 2005-ம் ஆண்டு தன் 20-வது வயதில் கல்கி போர்க்கோலம் பூண்டு, வெள்ளைக் குதிரைமேல் ஏறி, உருவிய வாளுடன் நாஸ்திகர்களை அழிக்கப் புறப்படுவார்; பிரிந்து கிடக்கும் பாரதத்தை ஒன்று சேர்ப்பார். வையகம் முழுவதும் தாமத்தின் ஆதிக்கத்தை நிலை நாட்டுவார். பூரணமாக 125 ஆண்டுகள் வாழ்ந்து கி. பி. 2110-ல் மகா சித்தி அடைவாராம்.

கல்கி எங்குப் பிறப்பார் என்பதை சுவாமி பைரவானந்தா என்பவர் தன் ஞானக் கண்ணால் பார்த்து அறிந்தவர் என்றும் தம்மை இப்புத்தகத்தை எழுதும்படிச் சொல்லி கல்கியின் சூட்சும உருவத்தையும் தனக்குக் காட்டியதாக சுவாமி ஜகதீஸ்வரானந்தா குறிப்பிட்டிருக்கிறார்.

கல்கிக்கு ஞான தீக்ஷை அளிக்கப் போகிறவர் மகா கௌரி சரஸ்வதி என்ற சந்நியாசினி என்றும் இவர் தன் புத்தகத்தில் கூறி, அவ்விருவர் படங்களையும் வெளியிட்டிருக்கிறார்.

அப்புத்தகத்திலுள்ள மற்றும் சில அபூர்வமான தகவல்கள் பின்வருமாறு:

மகாபாரதம், விஷ்ணு புராணம், கல்கி புராணம் ஆகியவற்றில் கல்கியின் தகப்பனார் பெயர் விஷ்ணு யோக்ஷா என்றும், தாயார் வஸந்தி தேவி என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. விஷ்ணு யோக்ஷா தம்பதியாகக்கு மூன்று பிள்ளைகளும், இரண்டு பெண்களும் பிறப்பார்கள். கடைசி பிள்ளையான 'கால கண்டன' தான் கல்கியவதாரம்.

இவர் ஏழு பெண்களை மணப்பார். ஒருத்தி நவத்வீபத்தைச் சேர்ந்த வங்கப் பெண் விஷ்ணுப்பிரியா. இரண்டாவது ஒரிஸ்ஸாவைச் சேர்ந்த சுபத்ரா மூன்றாவது பீகாரைச் சேர்ந்த சாவித்திரி; நான்காவது பஞ்சாபைச் சேர்ந்த கமலா ஐந்தாவது குஜராத்திப் பெண் நாராயணி ஆறாவது இமாசலத்தைச் சேர்ந்த லக்ஷ்மி. ஏழாவது உத்திரப் பிரதேசத்தைச் சேர்ந்த பதமாதேவி. கல்கிக்கு 100 பிள்ளைகளும ஒரு பெண்ணும் பிறப்பார்கள்

இந்த ஒரே மகளின் பெயர் சியாமாங்கினி. இவள் திரேதாயுகத்தில் விபீஷணின் மனைவியாக இருந்த சரமா. அசோகவனத்தில சீதைக்குப் பணிவிடை செய்ததால, ஸ்ரீ ராம சந்திரனின் அருளைப் பெற்ற சரமா, கல்கியின் ஒரே மகளாகப் பிறப்பாள்.

கல்கி பிறந்த நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு அவரது தங்கை சயதவி பிறப்பாள். அவள் ஐந்து வயதில் ஞான தீக்ஷை பெற்று சந்நியாசினியாக மாறி கல்கியின போரில் கலந்து கொள்வார். கல்கியின் இரண்டாவது தங்கை, சுவர்ணவாக, கமஸனின் மனைவியாக இருந்த அத்ரி பிறப்பாள்.

கல்கியின் தளபதிகள் யார் யார் என்பதும் இப்புத்தகத்தில குறிப்பிடப்பட்டுள்ளது. இவர்கள் போர் முறையில வல்லவர்களாக இருப்பார்கள். உத்திரப பிரதேசத்திலுள்ள மீரட்டில் (*Meerut*), வீரபத்ர சர்மா என்பவர் பிறப்பார். அபிமன்யுவைப் போல், இவரை யாரும் வெல்ல முடியாது. ஹிந்துக்களை வெறுக்கும் கிஸ்மத் அலி என்ற முஸ்லீம் மிகுந்த சக்தி பெற்று குலனுவில் பிறக்கும் ஒரு ஹிந்துவினால் அடக்கப்படுவாராம். வங்கத்தில் கிரிதராய் என்று ஒருவர் பிறப்பாராம். இவர் முன் ஜென்மத்தில் கர்ணனாக இருந்தவராம். கல்கிக்கு உதவியாக இருக்கப் போகும் சுதர்ஸன மிஸ்ரா என்பவர் அணுகுண்டுகளைவிட நாசகரமான ஆயுதங்களைக் கண்டு பிடிப்பாராம.

கல்கியை அவதார புருஷனாக இந்தியாவிலுள்ள தாழ்ந்த ஜாதி மக்கள்தான், முதலில் மதித்து அவரைப் பின்பற்றுவார்கள் என்றும, குகனை ஸ்ரீ ராமபிரான் தனது ஐந்தாவது தமபியாக ஏற்றுக் கொண்டது போல 'புத்துசாகு' என்பவரைக் கல்கி தன் நண்பனாக ஏற்றுக் கொள்வார் என்றும் இப்புத்தகம் கூறுகிறது

கல்கிக்குக் கோவில மேற்கு வங்காளத்தில ஹௌராவில் (*Howrah*) உள்ளது வேலூரிலுள்ள ஸ்ரீராமகிருஷ்ண தர்ம சக்கர கோவிலில் கல்கியின் மண் விக்கிரகம் 1964-ம் ஆண்டு மே மாதம் 23-ந் தேதி பிரதிஷ்டை செய்யப்பட்டது. ஓராண்டு வழிபட்ட பின் இந்தச் சிலை கங்கையில போடப்பட்டது. பிறகு, கருப்புப் பளிங்குக் கல்லில் கல்கிசிலை 1965-ம் ஆண்டு, மே மாதம் 13-ம தேதி, ஒரு சிறு கோவிலில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இந்தியாவிலேயே கல்கிக்கு ஏற்படுத்தப்பட்ட முதல் கோவில வங்கத்தில் உள்ள இக்கோயில்தான். 1961-லிருந்து கல்கியின் அவதாரத் திருநாள் வங்கத்தில் கொண்டாடப்பட்டு வருகிறது.

கல்கியின் பீஜா மந்திரத்தையும் சுவாமி பைரவானந்தா வெளியிட்டிருக்கிறார். துவாபர யுகத்தில் எட்டில் ஒரு பகுதி மீதியிருக்கும் போது கிருஷ்ணர் மதுராவில் அவதரித்தார். இதே போல் கலியுகத்தில், எட்டில ஒரு பகுதிக்குப் பின அதாவது 34230 ஆண்டுகள் பாக்கியிருக்கும் போது கல்கி அவதரிப்பார். கடைசி 30 ஆண்டுகளில் கடும் பூகம்பம் வெள்ளம் ஏற்பட்டு உலகமே அழிந்து போகும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆதாரம்: 'தசாவதார தத்துவங்கள்'

தகவல்: நஜன்.

திரு. ஏ. என். மாதமன், பி எஸ் ஸி., சென்னை-4

சிறுவர் பகுதி:

# புலையன் தண்ணீர்

பாரத யுத்தம் முடித்த பின், துவாரகைக்குப் போகும் வழியில் கண்ணபிரான உதங்க மாமுனிவரைக் கண்டான் தேரை நிறுத்தி அவருக்கு நமஸ்காரம் செய்து பூஜித்தான். பிராமணா,பகவானின மரியாதையை ஏற்றுக் கொண்டு,

"மாதவா! நீ பாண்டவ, கௌரவர் களுடன வெகு நாள இருந்து விட்டு வருகிருய் அவர்களிடையே சகோதர வாஞ்சையைப் பலபபடுததினயா? எல்லோரும் நலமாக இருக்கிருர் களா?'' என்றுகேட்டதும் கண்ணனின நிலை தர்ம சங்கடமாகிவிட்டது. இருந்தும தாழ்ந்த குரலில், "முனி வரே! கௌரவர்களைச் சமாதானம் செய்ய முயனறேன. அவர்கள் கடைசி வரை பிடிவாதமாகவே இருந்து வந்தனர் யுத்தம் முடிந்து எல்லோரும மாணடார்கள். புத்தி யும, பலமும விதியை மீற முடியாது'' என்று பதில் கூறிய கண்ணன், தர்மத்தை அனுசரிக்கிறேன் அவி வேகிகளான கௌரவாகளைக் கெஞ்சி னேன. அவர்கள் மதி மயககம கொணடு என் வார்ததையை அவமதித்தார்கள். பயமுறுத திப் பார்த்தேன்; கோபங் கொணடு என் விஸ்வருபததை யும காட்டினேன் அதுவும் வீணுயிற்று. அதர்மம் புரிநததால் யுததததில் மாணடு போனுர்கள். நீர் என மேல அபவாதம் சொல்லுவது தவறு!'' என்று கண்ணன் விபரமாக விளககிய பின்னா உதங்கர் சமா தானமடைந்தார். கண்ணன் மகிழ்ச்சி யடைந்து, "உமக்கு வேண்டிய வரம் ஒன்று கேளும்'' என்ருன்.

"அச்சுதா! உன்னைக் கண்டதே எனக்குப் பெரிய வரம். அவசியம ஏதேனும் கொடுக்க விரும்பினுல், நான எப்போது எநத இடத்தில் தணணீர் வேணடினுலும் கிடைககு மாறு வரம் தருவாயாக!'' என்று வேணடினுர் உதங்கர்.

'அப்படியே ஆகட்டும். நீர் தண் ணீர் வேண்டுமென்று எங்கே எண் ணினுலும் என்னை நினைத்துக் கொள் ளும்'' என்று வரமருளிய பகவான் துவாரகைக்குச் சென்ருன்.

பினனர் ஒரு சமயம், காட்டில் திரிநது கொண்டிருந்தபோது, தண் ணீர் கிடைக்காமையால் அச்சுதனை நினைத்தார், உதங்கர்.

அப்போது அங்கு ஒரு புலையன் தோன்றினுன். அவன் உடுத்தி யிருந்த கந்தல் துணி அழுக்குப் படிநது அவலட்சணமாக இருந்தது. கூட ஒரு நாய்க் கூட்டம். கையில் வேட்டைக்கு வேண்டிய வில்லும், அம்பும்; தோளில் கட்டித் தொங்கிய ஒரு தோற்பையில் ஜலம் வைத்திருந் தான்.

புலையன் நகைத்தவாறே உதங் கரைப் பார்த்து, "வாரும், பிருகு குல சிரேஷ்டரே, உம்மைப் பார்த் தால் தாகத்தால் தவிக்கிறீர் போலத் தோனறுகிறதே! என்னிடம் தண்ணீர் இருக்கிறது. பெற்றுக் கொள்ளுங் கள்'' என்று கூறி, தன் தோற்பையி லிருநத ஜலத்தை அவருக்கு ஊற்றப் போனுன்.

உதங்கர் மிக அருவருப்படைந்து, "வேணடாம்'' என்ருர். மனத்தில் கண்ணனை நிந்தித்தார். "இதுவா, உன் வரம்?'' என்று பகவானைக் கோபித்துக் கொண்டார்.

புலையன் ஜலத்தைப் பெற்றுக் கொள்ளுமபடி மீண்டும் வற்புறுத் தினுன். உதங்கர் கோபமாக மறுத்து விட்டார். புலையன் தன் நாய்க் கூட்டத்துடன் அவ்இடத்திலேயே மறைநதான்.

அந்த அதிசயத்தைக் கண்ட உதங் கர் பகவானை நினைத்தார். சங்கமும், சக்கரமும் ஏந்தி அங்கு தோன்றிய பகவானிடம், "புருஷோத்தமா, புலை யனுடைய தோற்பையிலுள்ள அசுத்த ஜலத்தை முனிவனுகிய எனக்குக் கொடுக்கச் செய்தது தருமமா? இது தான் நீயளித்த வரத்தின் மகி மையா?'' என்று நிந்தித்துக் கேட்ட முனிவரைப் பார்த்து புன்சிரிப்புடன், "நீர் தவறு செய்துவிட்டீர் உதங் கரே. உமக்காக இந்திரனிடம்போய், ஜலருபத்தில் அமிருதத்தைக் கொடுக்கச் சொன்னேன். மனித னொருவனைத் தேவனுகச் செய்வதை ஒப்புக்கொள்ளாத இந்திரன் கடைசி யில் என்னுடைய வற்புறுத்தலினுல் உமககு அமிருதம் கொடுக்க ஒப்புக் கொண்டான். ஆனுல் தன் சுய ருபத்தை விட்டு, புலையனுகத் தான் உமமிடம் சொலவதாகக கூறியதும் நானும் ஒப்புக் கொண்டேன். உம் முடைய ஆழ்ந்த ஞானத்தை நம்பித் தான அதற்கு ஒப்புக் கொண்டேன். ஆனுல் நீர் புலையனைக் கண்டு இன வெறுப்படைந்து அமிருதத்தையே நிராகரித்து விட்டீரே!'' என்று ஜனர்தனன் கூறவும், வெட்கத்தால் தலை குனிந்தார் முனிவர்.



நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் சொன் னுன். அதைக்கேட்ட முனிசிரேஷ்டா கண்ணன் மீது கடுங்கோபம் கொண் டாா.

"மாதவா! நீ கௌரவ குலத்தைக் காப்பாற்ருமல் போனுய்! நீ கபட மாக இருந்து அவாகள் அழிந்து போக விட்டது உன் தவறு. உன்னைச் சபிக்கப் போகிறேன்!'' என்று கோபாவேசமாக முனிவர் கூறி யதைக் கேட்ட பகவான், "சாந்தம்! சாந்தம்! நீர் தபஸ்வி! உம் அருந் தவத்தின் பயனைக் கோபத்தில் இழந்துவிட வேண்டாம. நான் சொல்வதைக் கேட்டுவிட்டு பின்னா வேண்டுமானுல் சாபம் கொடும்!'' என்று புன்னகையுடன் சமாதானப் படுத்திவிட்டு தான் ஈஸ்வர அவ தாரம் எனபதை உதங்கருக்குக் காட் டினுன்.

"முனிசிரேஷ்டரே! உலகைக் காக் கவும், தர்மததை நிலை நாட்டவும பல பிறவிகளை எடுக்கிறேன். அவ தாரத்திற்குத் தக்கவாறு அவதார

திரு. சுப்ரமணியன் சாலை
சென்னை.

## தி. தி. தேவஸ்தானத்தாரின்

# எழுத்தாளர் நிதி உதவித்திட்டம்

இதுவரை வெளிவந்துள்ள நூல்கள் பின்வருமாறு

1. மாத்வசங்கம் —ஹரிதாஸ பஜனை மஞ்சரி
2. டி. லோகிதாஸன் —வேமன்னுவின் வேத வாக்கு.
3. பி. கோபால் —பரமன் அடியார் பத்துப்பேர்
4. சீதாராமன் —ஹனுமன் கதை
5. எம். நாராயணசாமிபிள்ளை —தெய்வீகச்சிந்தனைகள், தனஞ்சயன்,
7. என். சுப்புரெட்டியார் —
வடநாட்டுத் திருப்பதிகள்
சோழநாட்டுத் திருப்பதிகள்
சேரநாட்டுத் திருப்பதிகள் பகுதி (2)
8. ஏ. சீனிவாசன் —கடவுள் வரலாறு
9. என். கிருபானந்தன்–சிறையிருந்த செல்வி
10. ஏ. சீனுவாசன் —திருவரங்க திருநூல்
11. எஸ். சௌமிய நாராயணன் —ஆண்டாள் அவதாரமும், அருட்செயலும்
11. ஆர். ஷண்முகம்பிள்ளை —திருவேங்கட மஹாத்மியம்
12. கு. தாமோதரன் –திருவாய்மொழித்திறன்
13. கே. வரதாச்சாரி —சுதாரஸ மஞ்சரி (1)
,, (2)
14. பெரிய நாயகம் —இந்துமதம்
15. வி. ரங்கசுவாமி ஐயங்கார் –வேங்கடேஸ்வரரும் வேதாந்ததேசிகரும்
16. ஆர். கண்ணன் சுவாமி–யக்ஷ பிரஸன்னம்
17. சி.என். கிருஷ்ணமூர்த்தி–திருமலையாற்றுப்படை
18. எஸ். கிருஷ்ணசுவாமிஐயங்கார் – ஸ்ரீவைகானஸ சித்தாந்த ஸாரம்
19. பண்ணைக்கோமகன் —ஈசனடியார் பத்துப்பேர்
20. நஜன் —ஸ்ரீ வைஷ்ணவ ஆசார்யர் வைபவம் ராமன் பேசுகிறான், குண்டலினி சக்தி
21. பி. என். கிருஷ்ணமாச்சாரியார் – பரமத பங்கம்
22. காளி ராஜன் —இறைவழிபாடு
23. திரு. ஆசூரி ராமானுஜதாஸன்-பேசும் தெய்வம்
24. மாருதிதாஸன் —இந்து சமயக்கருத்துக்கள்
25. கே. வெங்கடசாமி ரெட்டியார் –கலைமகள் பிள்ளைத்தமிழ்
26. எம். ஏ. வெங்கடகிருஷ்ணன்
—தொண்டைநாட்டுத் திருப்பதிகள்
27. பி. கே. மூர்த்தி — ஸ்ரீ தியாகராஜசுவாமிகள் சரித்திரம்.
28. பொன்னை. கோபால் — ஈசனின் எட்டு அடியார்கள்
29. ஆர். இளங்கோதாஸன் — திருவடிமாலை
30. எஸ். நடராஜன் —துவைத ஆசார்யர்கள் வைபவம்
31. புலவர். எம். வைத்தியலிங்கம்
—சேரமான் நாயன்மார் பாடல்கள்.
32. திருமதி. ராதா ராமனுஜன்
—ஸ்ரீ பத்மாவதி ஸ்ரீநிவாஸ கல்யாணம்
33. வி. ரங்கசுவாமி ஐயங்கார்
— ஸ்ரீராமாயண வாக்ய ரத்னங்கள்
34. ஆர். கோபாலன் – அன்னைத் திருச்சதகம்.
35. ஆர். மாணிக்க வாசகம் – திருமந்திர ஆராய்ச்சி.
36. ஏ. ராமலிங்கசுவாமி — பேசும் தெய்வம்.
37. ஆர். பார்த்தசாரதி ஐயங்கார் – திவ்ய தேச கீர்த்தனைகள்.
38. மாருதி தாஸன் — ஆழ்வார்கள் வரலாறு.
39. என். ஆர். சம்பத் — நாரத பக்தி சூத்ரம்.
40. ஏ. சுதாகர்—ஆழ்வார்-அன்னமய்யா பாடல்களில் கண்ணன் விளையாட்டுக்கள்.
41. டி. ராஜ்மோகன்ராஜ்—மார்கழித் திங்கள்.
42. கே. ஆர். கிருஷ்ணமாச்சாரி—நாயகி நவின்ற நல்லுரைகள்.
43. எஸ். நடராஜன்—நாதோபாஸனை.
44. என். முத்துக்கிருஷ்ணன் — பக்திப்பாடல்கள்.
45. கே. எஸ். மணவாளன் — வேதாந்ததேசிகர்
—மணவாள மாமுனிகள்
46. கே. ஆர். கிருஷ்ணமூர்த்தி — உறையூர்
47. பண்ணைக் கோமகன் — குன்றக்குமரன்
48. எம். நாராயண வேலுபிள்ளை —
1. மகாபாரதக் காட்சிகள்
2. இராமாவதாரம்
49. டி. பால்வண்ணனுர் — தெய்வீக உண்மைகள்
50. என். சுப்பு ரெட்டியார் — சைவ சமய விளக்கு
51. டி. எம். சௌந்தரராஜன் — வாழ்வும் வழிபாடும்
52. அம்மன் சத்தியநாதன் — பாரதியும் சக்தி வழிபாடும்
53. நாகர் கோயில் கிருஷ்ணன் — தெய்வீக பண்டிகைகளும் தியானங்களும்
54. ஏ. நடராஜன் — உண்மையின் உயர்வு
55. கே. நடராஜதாசன் — சித்தி அருளும் சக்தி வழிபாடு
56. வி. ஆர். ரங்காச்சாரி —'ஸ்ரீமத் ரகஸ்ய த்ரயசாரம்
57. அ. ஸ்ரீநிவாசன் — வைணவ தத்துவ ஞான அடிப்படைகள்
58. டி. எஸ். ராஜகோபாலன் — கீத கோவிந்தம்
59. பொன். பாஸ்கர மார்த்தாண்டன்
— வாழவைக்கும் வைகுண்டங்கள்
60 ஏ சுதர்ஸனன் — ஸ்ரீ சுதர்ஸன வைபவம்

# கவிஞனும் காகமும்

ஊழி வினைக்குறும்பர் ஒட்டருவ
　　　　　　　　　　ரென்றஞ்சி
ஏழை மனமே யினித் தளரேல்—
　　　　　　　　　　ஆழிவண்ணன்
தன்னடிக்கிழ் வீழ்ந்து சரணென்
　　　　　　　　　　றிருந்தொருகால்
சொன்னதற்பி னுண்டோ துயர்.

பலரால் பலவகைகளில் ஈட்டப் படும் பணம் வங்கியில் சேமிக்கப் படுகிறது. ஒருவன் தன் ஊதியத்தை வங்கியில் சேமித்தால் தேவையான பொழுதெல்லாம் அவன் அப் பணத்தை எடுத்து உபயோகித்துக் கொள்ளலாம். சரி, நம் பணம் வங் கியில் இல்லை, என்ன செய்வது? மற்றவர்கள் அங்கு சேமித்திருக்கின் றார்களல்லவா. நாம் நமது தேவைக்கு அந்த சேமிப்பிலிருந்தும் கடனாகப் பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம்.

அனுபவம் என்ற வங்கியிருக்கிறதே அதுவும் இதனைப் போன்றதுதான். இந்த வங்கியில் ஒருவனது அனுபவத் தால் ஈட்டப்பட்ட அறிவு என்ற செல்வம் சேமித்து வைக்கப்பட்டிருக் கிறது. ஒவ்வொருவனும் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விஷயத்திலும் இந்த சேமிப்பினின்றே தேவையான அளவு அறிவுச் செல்வத்தை எடுத்து உலகில் ஏற்றிக் காண்கிறான். இவ் வாறு இவன் இச்சேமிப்பை பயன் படுத்திக் கொள்கிறான். இந்த அனு பவ ஞான வங்கியில் மற்றவர்களால் சேமிக்கப்பட்டிருக்கும் அறிவுச் செல் வத்தினின்றும் ஒருவன் அவ்வப் போது தேவைக்கு ஏற்ப கடனாகப் பெற்றுக் கொள்ளலாம்.

ஒவ்வொருவர் வாழ்விலும் அறி வும், அதைச் சார்ந்தவற்றின் இயக் கங்களும் இவ்வாறே நடந்துகொண்டு இருக்கின்றன. சாதாரண மனிதன் இதனை உணரும் அறிவின்றி இயங் கிக் கொண்டிருக்கிறான். அறிவு முதிர்ச்சி பெற்றவன் இதனை அறிந் தாலும் உணர்கின்றானா என்பது ஐயப்பாட்டிற்குரியது. பின் யார் தான் இதனை உண்மையில் உணர்ந்து செயலாற்றுகின்றான்? தீர்க்கதிருஷ்டி யுள்ள கவிஞன் ஒருவனே இதனைத் தெள்ளிதின் உணர்கிறான். கவிகளின் வாழ்வையும் வாக்குகளையும் ஊன்றிக் கவனித்தால் இது புலனாகும்.

ஒரு உதாரணம் காண்போம். காகத்தை நாம் பார்க்கிறோம். என்ன நினைக்கின்றோம்? இது ஒரு பறவை. கரிய நிறம் கொண்டது. கா கா

திரு. ந. இராமன்
கும்பகோணம்.

என்று கத்தும். இவ்வளவுதான் நமது திருஷ்டி. இதற்கப்பால் செல் லும் வலிமை நமக்கில்லை.

இதோ ஒரு கவிஞன் காகத்தைக் காண்கிறான். அழகுடன் உண்மையை வெளிப்படுத்துகிறான். யார் அவன்?

தமிழ் வளர்த்த பாண்டி நாட்டின் தலைநகரம் மதுரை. திருமலை நாயக் கர் அரசவையில் ஒரு நாள் கொலு வீற்றிருக்கும் போது, தன் அவையில் இருந்த கவிஞர் பெருமக்களைக் குறித்து ஒரு வினா தொடுத்தார். காகத்திற்கு அப்பெயர் வரவும், அது கா கா எனக் கரையவும் காரணம் என்ன? என்று வினவினார். அவை யில் பேரமைதி நிலவியது. எவரும் பதிலளிக்க முன்வரவில்லை.

அவ்வமயம் அவையில் பார்வை யாளர்களில் ஒருவராய் நீலகண்ட தீக்ஷிதர் என்ற இளவயதுக் கவிஞர் ஒருவர் அமர்ந்திருந்தார். சற்றே சிந்தனையை முடுக்கி விட்டார். கவி ஞன் தானே கவிஞனைக் கண்டுகொள் வான், ரசிப்பான். உடன் தீக்ஷிதரின் சிந்தனை இராமாயணத்திற்குச் சென் றது. அவர் மனக் கண் முன் அற் புதக்காட்சி விரிந்தது.

சித்திரக் கூடத்திருப்பச் சிறு காக்கை முலை தீண்டி மூவுலகும் திரிந் தோடி, வித்தகனே! இராமா! ஓ! நின் அபயம்! என்ற அவலக் குரல் செவிகளில் எதிரொலித்தது.

பிராட்டியும் இராமபிரானும் ஏகாந்தமாகக் களிப்புற்றிருக்கும் போது ஒருசமயம் பெருமாள் பிராட் டியின் மடியிலே தலை சாய்த்து மோனத்துயில் கொண்டிருந்த நேரத் தில் தேவன் ஒருவன் பிராட்டியின் பால் அறியாத்தனமாக ஆசை வைத்து, காக உருக்கொண்டு பிராட் டியின் முலை தீண்டினான். தன் செய் கையால் அரக்கனான அக்காகத் தின் செயலை பாகவதர் தலைவியான பிராட்டி விஷயத்தில் பொறுக்கமாட் டாதவனான பகவான் பிரம்மாஸ் திரத்தை விட்டருளினான். அக்காகா ஸுரனும் அவ் அம்புககுப் பயப்பட்டு போகக்கூடிய இடமெல்லாம் போய்த் தடைபட்டுத் திரிந்து போக்கிடமில் லாமல் பெருமாள் திருவடிகளிலேயே

அபயம் அபயம் என்றலறியவாறு வந்து வீழ்ந்தான்.

இக்குரல் கவிஞரான நமது தீக்ஷிதர் செவிகளில் எதிரொலித்தது.

பலியை உண்டு வாழும் அக்காகம் மாம்ஸ போஜனத்தில் மட்டும்தான் தனக்கு இசசையென்பதில்லை என் பதைக் காண்பிக்குமாப போலே பிராட்டியின் மாம்ஸத்தை சிறிது உண்ட பிறகும கைவிடாமல பிராட்டியைக் குத்திக் கொண்டே சுறறிச் சுற்றிப் பறந்து பதுஙகித் திரிந்தது. பிரியமானவனின் துயில் கலைக்க விருப்பமில்லாதவளாய் பிராட்டி அளவிலா பொறுமையுடன் சகித திருந்தாள்.

பிராட்டியின் துன்பத்தாலும் காகாஸுரனின் அரவத்தாலும் துயில் கலைந்த பரமன் நிலைமை கண்டு வெகுண்டு அவனைக குறித்து பிரம்மாஸ்திரத்தை ஏவினான். அதுவும் அவனை இடைவிடாது துரத்தியது.

स तं प्रदीप्त चिक्षेप दर्भं तं वायसं प्रति ।
ततस्तं वायसं दर्भः सोऽम्बरेऽनुजगाम ह ॥

ஸ தம ப்ரதீபதம சிக்ஷேப தர்பபம
தம் வாயஸம பரதி |
ததஸதம வாயஸம தர்ப்ப :
ஸோ அமபரே அநுஜகாம ஹ ||

தந்தை இந்திரன காப்பானோ என ஓடினான இராமபிரானின் கோபத்திற்கு இலக்கானவர்களைக் காபபதறகுத் தனக்கு சக்தியில்லாமையால் அவன் கைவிட்டு விட்டான். வெளி வேஷத்திறகாகக் கைவிடவில்லை; நெஞ்சாரக் கைவிட்டான தகப்பன. தாய்க் குலத்திற்கே பெருமை சேர்க்கும் பிராட்டியைத் தீண்டித் துன்புறுத்திய காரணத்தால் பெற்ற தாயும் இவனைக் கைவிட்டாள்.

இவளும் கைவிட்டளவில் தன் ஜாதியைச் சேர்ந்த தேவர்களிடம் சென்றான. அவர்களும் கைவிட்டார்கள். இராமபிரானின கடைக்கண சிவந்தாலே கலங்கும் இவர்கள காகாஸுரனுக்கா புகல் அளிப்பார்கள்!

உறவினரும கைவிட்டனர். பின் தன் இனததவரான பறவைகள் காக்குமோ என நினைத்து ஓடினான். பெருமாள திருவடிகளிலே அபராதம பண்ணினவன் என்றறிநது, பெரிய திருவடியாம் கருடனுககுப் பயந்து அவைகளும கைவிட்டு விட்டன.

இரககம் மிகுநத ரிஷிகள் காப்பார்களோ என்று ஓடினான். அவர்

கள் தீர்க்கதர்சிகள் ஆகையாலே இவனைக் காத்தால் நாம் அழிக்கப் படுவோம் என அஞ்சி அவனைக் காக்கத் துணியவில்லை. இவ்வாறு மூவுலகும் திரிந்தோடிக் கதியின்றி அலைந்தான்.

स पित्रा च परित्यक्तः सुरैश्च समहर्षिभिः ।
त्रीन् लोकान् सपरिक्रम्य तमेव शरणं गतः ॥

ஸ பித்ரா ச பரித்யக்த :
ஸுரைஸ்ச்ச ஸமஹர்ஷிபி : |
த்ரீன் லோகான் ஸம்பரிக்ரமய
தமேவ சரணம கத : ||

பார்த்தான் காகாஸுரன். ஒரு க்ஷண நேரம சிந்தித்தான புகல அளிப்பாாகளோ என நினைததுச் சென்றவர்களுடைய முகங்களைக் காட்டிலும், இவனைக் கொல்ல நின்ற இராமபிரானின் திருமுகததின் குளிர்ச்சியே கண்முன்வந்தது.'வண்டு படி துளப மார்பனிடைச் செய்த பிழை உணடு பல வென்று உளநதள ரேல், தொணடர்செயும் பல்லாயிரம் பிழைகள் பார்த்திருந்தும் காணுங் கண் இல்லாதவன் காணிறை' எனற ஞானோதயம் ஏற்பட்டது.

ஓடினான். பரமனையே பற்றினான். 'காகுத்ஸனே கா கா, கருணையம் பதியே கா கா, கார் முகில் வண்ணனே கா கா: காமத்தால் செய்த கடும் பிழையும் பொறுத்துக் காப்பாய்; அமலனே! ஆதிபரம் பொருளே! புகலிடம் வேறில்லை. நீயும் எனைக் கைவிட்டு விடாதே, காத்தருள்வாய், கா கா,' எனக் கதறிக் கொண்டு தலைகுப்புற பெருமானின் திருவடியில் வீழ்ந்தான்.

இராவணன் தானேயா யிருந்தாலும் கூடடிவா என்று பகரும் பரமன இவனைக் கைவிடுவானோ. காகாஸுரனிடம் கருணைக்கண் பாலித்தான காகுத்ஸன். பிராட்டியும மன்னித்தருளினாள். பிரம்மாஸ்திரம் ஒரு கண்ணை மட்டும் பறித்துக் கொண்டு பிரானின் அம்பராத் தூணியைச், சரணடைந்தது.

स तं निपतितं भूमौ शरण्यः शरणागतम् ।
वधार्हमपि काकुत्स्थः कृपया पर्यपालयत ॥

ஸ தம் நிபதிதம் பூமௌ சரண்ய :
சரணாகதம் |
வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா
பர்யபாலயத் ||

அது முதல் காக்கைகளுக்கு ஒற்றைக் கண் என்பது தெரிந்த விஷயம் என்று பிராட்டி அநுமனிடம் கூறுகிறாள். 'ததா ப்ரப்ருதி காகாநாம் ஏகம் அக்ஷீதி விச்ருதம்.'

மனதில் விரிந்த இக்காட்சியை அப்படியே படம் பிடித்தார் ஸ்ரீநீலகண்ட தீக்ஷிதர். மிகப்பெரும கவிஞர் பரம்பரையிலே பிறந்த இவரிடத்து சிந்தனைவெள்ளம் பெருக்கெடுத்து ஓடிக் கொணடிருந்தது. உடனே இப்பறவைக்கு காகம் எனப் பெயர் வரவும் அது கா கா எனக் கரையவும் காரணம யாதென உணாந்தார், உடனே ஒரு சுலோகம் மலர்ந்தது.

காகாஸுர சரணாகதி முடிந்தவுடன அவன் இனத்துப் பறவைகள் யாவும் ஒரு மாநாடு கூட்டின. பெரிய திருவடியைப் போற்றி வணங்கின. மன்னிக்கத்தகாத குற்றம் புரிந்த தன் இனத்தவனை இராமபிரான் மன்னித்து விட்டதால் பெண்ணினமும் ஆணினமும் கூடி பிராட்டியையும், பெருமானையும் வாழ்ததின. அப்போது பெண் பறவைகள் பொறுமையில் பிராட்டிக்குச் சமமான பெண் யார்? கா? (ஸம்ஸ்கிருதத்தில் 'யார்' என்பது பெண்பாலில் 'கா' கா என வரும்) என்று வினவின. உடனே ஆண் பறவைகள் கருணையில் இராமபிரானுக்குச் சமமான புருஷன் யார்? க:? (சம்ஸ்கிருதத்தில் 'யார்' என்பது ஆண் பாலில் 'க:' க: என வரும்) என்று வினவின.

இவ்விரண்டு வினாக்களுக்குமே சேர்ந்து காக: (காக:) எனறாயிற்றாம். கா, க: என்ற சப்ததைக் கேட்ட அங்குக் கூடியிருநத எல்லா பறவைகளும் பிராட்டிககும் பெருமானுக்கும் பெருமை சேர்க்கும வண்ணம் நனறி தெரிவிக்கும முகததான, தன இனததலைவன செய்த தவறுக்குப் பிராயசசித்தமாய் இனி நம் இனததின் பெயர் இவ்வாறே (காக:) அழைக்கப்படட்டும் என முடிவெடுத்தன.

பாகவத அபராதமும், பகவதபராதமும் செய்பவர்களுக்கு எங்கள் வாழ்வே ஒரு பாடமாக அமையட்டும். நாமனைவரும் அபசாரப்பட்டது போல் ஒரு கண்ணை இழந்தது போல் இவ்வுலகில் இனியாரும் பாவியாக ஆகக் கூடாது. எனவே நாமனைவரும் இனி எல்லோரும் பகவானைப் பிரபத்தி பண்ணுங்கள், பகவானை சரணடையுங்கள், அப்பரமன் காப்பான் காப்பான் என்று கதறிக் கொண்டேயிருப்போம். நம் பாவமும் தொலைப்போம். மற்றவர்கள் தவறு செய்யாதிருந்தும் வண்ணம் இனி நாமனைவரும் கா கா என்றே கரைவோம்; உலகில் காகுஸ்தன் பெருமையை போற்றிக் கொண்டேயிருப்போம்; இவ்வாறு முடிவெடுத்து அப்பறவைகள் இன்று வரையில் செயலாற்றி வருகின்றனவாம்;

सीतेव रामः इव क्षमया दयया भुवन इव काकः ।
इत्यात्मघोष वचसा तज्जातीयानां तथैव
संज्ञासीत् ॥

ஸீதேவ ராம இவ க்ஷமயா தயயா
புவன இவ காக: |
இத்யாத்ம கோஷ வசஸா
தஜ்ஜாதீயானும் ததைவ ஸம்ஞாஸீத்||

பார்வையாளரிடையே இருந்து கம்பீரமான குரலில் அர்த்த புஷ்டியுடன் எழுந்த இந்த சுலோகத்தை கேட்டவுடனேயே அகமிக மகிழ்ந்தார் திருமலை நாயக்கர். இளைய கவியின் வாசாலகத்தைப் பாராட்டிப் பரிசில் பல வழங்கினார்; அவரையே தன் ஆஸ்தான கவிஞராகவும் நியமித்தார்.

காக்குங் கடவுளின் கருணையையும் நம் பொருட்டே பொறுமை நலம் பூணும் பிராட்டியின் பெருமையையும் எப்போதும் புகழ்வதால்தான், சரணாகதித் தத்துவத்தைச் சாரமாய்ச் சொல்வதாலதான் இன்று கூட அனைவரும் பகவதாராதனமோ அல்லது பிதரு காரியங்களோ முடிந்தவுடன், நன்றி தெரிவிக்கும் வணணம் காகத்திற்கு அனனமிட்டு ரக்ஷிப்பதை வழக்கமாக வைததுக கொண்டிருக்கிறோம்

இந்த நீலகணட தீக்ஷிதரே பிற்காலத்தில் சிவபெருமானின் அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும் "சிவலீலார்ணவம" என்ற நூலாய் அழகுற அமைத்தார். இது சிவ பக்தாகளுக்கு சிவ பாகவதம. காவிய ரசிகர்களுக்கு நவயுக காளிதாஸனாய் இவர் இன்றும் காட்சியளித்துக் கொண்டிருக்கிறார்.

★

# பிரம்மசர்யம்

பீஷ்மரின் பிரம்மசர்யம் என்னும் தலைப்பில் அண்மையில் ஒரு கட்டுரை இரண்டு இதழ்களில் வெளியாகி இருந்தது. அதன் மூலம் பிரம்மசர்யம் இருவகைப்படும் என்பதும், சாஸ்திர ஸம்மதமான கிரஹஸ்த தர்மத்தை அனுசரிக்கும் கிரஹஸ்தாச்ரமியும் பிரம்மசர்யத்தை அனுஷ்டிப்பவனாகக் கருதப்படுவான் என்பதும் மிகவும் தெளிவாகவும், மேல்கோள்களுடனும் உன்னதமானவகையில் விளக்கப்பட்டிருந்தது.

உலக விஷயங்கள் யாவற்றையும் தனக்கே உரித்தான வகையில் மிகவும் சுவையாக விளக்கும் வால்மீகி மஹருஷி ஸ்ரீமத்ராமாயணத்தில், பிரம்மசரியத்தின் இருவகையைப் பற்றி மிகவும் சூக்ஷ்மமாக ஒரு வ்ருத்தாந்தத்தில் விளக்கி இருக்கிறார். அதன் ரஸத்தை அனுபவிப்போம்.

அறுபது ஆயிரம் ஆண்டுகள் கழிந்தபின்னரும் புத்ரப் பேறில்லாமல் வருந்திக்கொண்டிருந்த தசரத சக்கரவர்த்தி ஒரு சமயம் அதற்காக அசுவமேதயாகம் செய்ய நினைக்கிறார். உடனடியாக மந்திரிகளையும், வஸிஷ்டருள்ளிட்ட புரோஹிதர்களையும் மஹருஷிகளையும் வரவழைத்துச் சபை கூட்டித் தன்னுடைய எண்ணத்தை அவர்களுக்கு அறிவித்து அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கோருகிறார். அவர்கள் யாவரும் ஒருமித்து அரசரின் அபிப்பிராயத்தை ஏகமனதாக ஆதரிக்கின்றனர். உடனடியாக அசுவமேத யாகம் செய்வதற்குத் தேவையான ஏற்பாடுகள் யாவற்றையும் முறைபிசகாமல் செய்து வைக்கும்படி எல்லோரிடமும் தசரதர் தெரிவித்துவிட்டு இந்த சந்தோஷ செய்தியைத் தன் மனைவியிடமும் உற்சாகமாகக் கூறுகிறார்.

அதன் பிறகு தசரதர், மந்திரிச்ரேஷ்டரான சுமந்திரரைச் சந்திக்கிறார். இருவரும் தனியாக உரையாடும் போது சுமந்திரர், தசரதர் செய்யப் போகும் அசுவமேத யாகத்தை நடத்தி வைப்பதற்காக ருஷ்யச்ருங்க மஹருஷியை வரவழைத்து அவருடைய தலைமையில் யாகம் நடத்தப்படவேண்டுமென்று கூறுகிறார். இந்த யாகம் சம்பந்தமாக வஸிஷ்ட மஹருஷி தேவலோகத்திலே தசரதர் பிறப்பதற்குப் பல ஆண்டுகள் முன்னரே ஸநத்குமாரரிடமிருந்து கேட்ட விஷயங்களை வஸிஷ்டர் கூறத் தான் கேட்டதாகக் கூறுகிறார்.

இந்த விவரங்களை விளக்கிக் கூறும் போது "காச்யபருடைய குமாரரான விபண்டகர் என்ற பிரஸித்தமான மஹருஷிக்கு ரிச்யச்ருங்கர் என்று ஒரு புத்ரர் பிறக்கப் போகிறார். அவர் வனத்தில் வஸித்துக்கொண்டு எப்போதும் பிதாவுக்குச் சிச்ருஷை செய்வதன்றி உலக விஷயமான எந்த விவரமும் அறியாதவராக இருப்பார். அவருடைய (நைஷ்டிக) பிரம்மசரியத்திற்கு மாறுதல் ஏற்படப் போகிறது. இவ்வாறான (மாறுபாட்டை அடையும்) பிரம்மசரியம், லோகப்ரஸித்தமானதாகவும், ப்ராஹ்மணர்களாலும் (ஸ்ம்ருதி கர்த்தாக்களாலும்) பூர்வத்தில் சொல்லப்பட்டுள்ளது' என்று சுமந்த்ரர் தசரதரிடம் கூறுகிறார். இந்த விவரங்கள்;

"द्विविधं ब्रह्मचर्यस्य भविष्यन्ति महात्मन: ।
लोकेषु प्रथितं राजन् विप्रैश्च कथितं पुरा" ॥

அரசே! மஹாத்மாவான ருச்யச்ருங்கருடைய பிரம்மசரியத்தில் ஒரு மாறுதல் உண்டாகப் போகிறது. எப்போதும் லோகப்ரஸித்தமானது (பிரம்மசர்யம்) ப்ராஹ்மணர்களாலும் பூர்வத்தில் கூறப்பட்டுள்ளது. [(பால-9-5) என்னும் ஸ்லோகத்தில் அடங்கியுள்ளது.] இந்த ஸ்லோகத்திற்கு வ்யாக்யான கர்த்தாக்கள் விவரமாக ...ளித்திருக்கிறா... மாலுதோலும் தண்டமும் த... அனுஷ்டிக்கப்படும் நைஷ்டிக ப்... சரியம் தவிர, லோகப்ரஸித்த... இரண்டாவது ப்ரம்மசர்யம் ... உண்டு என்று அவர்கள் கூறி... கிறார்கள். இதை மேலும் விளக்... போது, கிருஹஸ்தன் ருதுகாலத்... (மட்டில்) பத்னியுடன் சேர்... ப்ரம்மசர்யத்தைச் சேர்ந்ததேயா... என்று கூறி, ருதுகாலத்தை வி... கும் போது யாக்ஞவல்க்யர் முத... மஹருஷிகள் 'ஸ்திரீ'களுக்கு ர... தர்சன காலம் முதல் நான்கு நா... கள் கழிந்த பிறகு பதினாறு தின... ளுக்குள் (நிஷேதிக்கப்படாத) இர... டைப்பட்ட தினங்களில் ஏற்ப... சேர்க்கை, என்றும், அவ்வா... அனுஷ்டிக்கும் க்ரஹஸ்தனும் பிரம்... சாரியாகக் கருதப்படுவான் என்... வ்யாக்யாதாக்கள் அறிவித்துள்ளா... கள்.

இந்த விவரத்தை மிகவும் சுருக்... மாக ஒரு ஸ்லோகத்தில் வால்மீ... கூறிய பிறகு அதன் தொடர்ச்சியா... ருச்யச்ருங்கருக்கும் சாந்தைக்கு... ஏற்பட்ட விவாஹத்தின் விவரங்களை விளக்கி, தசரதர் வஸிஷ்டரிடம் அனுமதி பெற்று ருசியச்ருங்கரை அழைத்து வந்து அவருடைய தலைமையில் அசுவமேதத்தை நடத்தும்படி கூறியதாக விவரித்திருக்கிறார்.

மேலும் காமாந்தகனாக இந்த்ரன் அஹல்யையிடம் வரும்சமயம் 'ருதுகாலம் ப்ரதீக்ஷந்தே நார்த்தின: ஸுமத்யமே! ஸங்கமம் த்வஹமிச்சாமி த்வயா ஸஹ ஸுமத்யமே!' காமியானவன் உத்வேகத்தோடு வரும் போது ருது காலத்தை எதிர்பார்ப்பதில்லை! அழகான இடையுள்ளவளே உன்னுடைய ஸங்கமத்தில் ஆசையுள்ளவனாக இருக்கிறேன். (பால-48 18) என்று கூறும் ஸ்லோகமும், ருதுகால சங்கமம் பிரம்மசர்யத்திற்குச் சமமாகக் கருதப்படும் என்னும் கருத்தை ஆதரிப்பதாக உள்ளது.

(சுகி)

தொடர் நூல்:

# திருவேங்கடமலை வரலாற்று மாலை

**நாகாபரணம் (பாம்பணி):**

இனிப் பொன்னாலான நாகாபரணத்தைப் பற்றியதொரு சரித்திரம் சொல்லப்படும். முன்பொருகால வீர நரஸிம்ஹதேவனென்னும் ஒரு கஜபதி (சஜபதி என்பது விஜய நகர மன்னர்களுக்கு வழங்கப்படும் பட்டப் பெயர் என்பர்.) தீர்த்த யாத்திரை செல்லுமவன் ஸேது தரிசனம் செய்ய விரும்பிப் புறப்பட்டு நடு வழியில் திருவேங்கட மலையின் வைபவம் கேட்டு அம்மலையேறி ஸ்ரீ ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி ஸ்ரீ ஜ்ஞாநவராகப் பெருமானை வணங்கிப் பின்பு முறைப்படித் திருவேங்கடத்தரியென்னும் நரசிங்கப் பெருமானையும் திருவேங்கட முடையானையும் தொழுது துதித்து க்ஷேத்திரத்தில் உபவாஸமிருத்தல் முதலான விதி முறைகளையும் அனுஷ்டித்து, கலியுகத்தில் திருவேங்கட நாதனது அதிசயித்த பெருமையையும் கேட்டு அப்பெருமானுடைய திவ்ய பாதாரவிந்தங்களில் உண்டான அளவற்ற பக்திக்குப் பரவசனாய் அவனது திருக்கோவிலில் ஏதாவது திருப்பணி செய்ய வேண்டுமென்று ஆசைப்பட்டு, எவ்வகையான தொண்டு செய்தல் தகுமென்று அங்குள்ள வித்வான்களை வினவினன். அவர்கள் அணிகலன்களில் கிரீடமும் வாகனங்களில் தேரும் கோபுரங்களில் விமானமும் இரத்தினங்களில் வயிரமும் சாதிகளில் பிராம்மண சாதியும் ஆச்சிரமங்களில் ஸந்யாஸாச்சிரமமும் (துறவி நிலை) உயர்ந்தனவென்று ஆகம சாத்திரம் கூறியுள்ளவற்றுள் எது உன் மனத்திற்குப் பிடித்ததோ அதைச் செய்யக் கடவாய் என்று மன்னனிடம் கூறினர்.

பிறகு அக்கஜபதி இந்தத் திவ்யத் தலத்தில் திருவேங்கடவன் பெருமைக்குத் தக்கபடி ஒரு கோபுரம் அமையவில்லையாகையால் இங்கு மிகப் பெரிய கோபுரம் ஒன்றினைக் கட்டுவோமென்று நினைத்து, அதற்காகப் பெருமளவில் பொருளைக் கொடுத்து வேலையாட்களையும் ஏற்படுத்திக் கோபுரங்கட்ட ஆரம்பம் செய்வித்து, நான் மறுபடியும் இங்கு வருகிறேன், இக்காரியத்தைத் தடங்கலின்றிச் செய்து முடியுங்களென்று கட்டளையிட்டு, ஸ்ரீகாஞ்சிபுரம் ஸ்ரீரங்கம் முதலிய திவ்ய தேசங்களில் எம்பெருமான்களைச் சேவித்துக் கொண்டே சென்று சேதுவையும் தரிசித்துத் திரும்பி மறுபடியும் திருவேங்கடமலைக்கு ஏறி வந்து, பாதியளவில் கட்டப்பட்ட கோபுரத்தைக் கண்டு மகிழ்ந்து, தானம் முதலிய தருமங்களால் அங்கு வசித்துவரும் மக்களைப் பலவகையில் மகிழ்வித்துக் கொண்டு அங்குச் சில நாள் தங்கியிருந்தான்.

அப்போது ஒரு நாளிரவு அந்தக் கஜபதியின் கனவில் உயர்ந்த ஸர்ப்பம் (பாம்பு) ஒன்று எதிரே வந்து 'ஓ கஜபதியே, இத்திருமலை என்னுடைய உடம்பாகும். இதில் மிகப் பெரிய கோபுரங்கட்டுதல் எனக்குப் பெரும்பாரத்தை உண்டாக்குகின்றது. அது காரணமாக எனக்குப் பெருந்துன்பம் உண்டாயிற்று. அப்படி உன்னால் உண்டான இப்பெருந் துன்பத்தை என்னுடைய ஸ்வாமியினிடம் சென்றாலல்லது போக்கிக் கொள்ள முடியாது' என்று கூறிவிட்டுக் கோவிலுக்குச் சென்று பகவானுடைய வைகுண்டஹஸ்தத்தில் (=வைகுண்டம் செல்ல இதுவே வழி என்று திருவடிகளைக் காட்டும் பெருமாளின் வலது திருக்கையில்) சுற்றிக் கொண்டது. இங்ஙனம் கனவு கண்டு மிகவும் அஞ்சிய வீர நரஸிம்ம தேவனென்னும் கஜபதி புலவர்பெருமக்களையழைத்துக் கனவில் கண்ட அனைத்தையும் விண்ணப்பித்து, இக்கனவிற்கு என்ன கருத்தென்று அவர்களை வினவினான்.

திரு தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி–வித்வான், திருப்பதி.

பின்பு அப்புலவர்கள், அரசே இத்திருமலை ஆதிசேஷனுடைய அவதாரமென்பது ஸ்ரீவேங்கடாசல மாகாத்மியம் கூறும் புராணப் பகுதிகளில் பலபடியாக விளங்கக் கூறப்பட்டுள்ளது. உனது கனவை ஆராய்ந்தால் நீ கட்டும் கோபுரம் ஆதிசேஷனுக்குப் பாரத்தையுண்டாக்கித் துன்புறுத்துவதனால் அதை அவன் இசையவில்லையென்றே தோன்றுகிறது. ஆகையால் மிகப்பெரும் பாரமாய் மிகவுயர்ந்த கோபுரத்தை இங்குக் கட்டக்கூடாதென்பதுதான் கனவின் கருத்தாகுமென்று கஜபதிக்குவிடையளித்தனர்.

அதன் பிறகு அவ்வரசனும் மிகவு மஞ்சிக் கோபுரங்கட்டுவதை அவ்வளவோடு நிறுத்தி, இந்தவளவு கோபுரத் திருப்பணியே திருவேங்கடவன் இசைந்ததென்று நினைத்து ஆதிசேஷனிடம் நேர்ந்த அபசாரத்திற்குப் (குற்றத்திற்குப்) பரிஹாரம் செய்வதற்காகச் சேஷனுடைய வடிவமுடையதோர் உயர்ந்த ஆபரணத்தைச் செய்வித்து, இதைப் பெரு

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல–இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

மாளுககு அணிவிக்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்து அதைப் பெருமாளுடைய அருகில் வைத்தான்.

பின்பு பகவானுக்குத் தொண்டு செய்யும் பரிஜனங்கள் அரசன் ஸமர்ப்பித்த நாகவடிவமான ஆபரணத்தைக் கண்டு, இதைப் பெருமாளுக்கு எங்கு ஸமர்ப்பிக்க வேணடும்? மேலும் பாமபினுருவமுடைய இவ்வணி வேறு தேவதைக்கு உரிய தாயிற்றே, இதை இப்பெருமாளுக்குச் சாத்துவது தகுமா தகாதா என்று ஸநதேகப்பட்டுக கொணடிருக்கையில், பெருமாள் ஒருவன்மேல் ஆவேசித்து 'ஓ பரிஜனங்களே முன்பு ஆதிசேஷனுககும் வாயுதேவனுக்கும் நடந்த விவாதத்தில் ஆதிசேஷமலையை இங்குக் கொணர்வதற்காக நான் வாயுவினிடம் சிறிது பட்சபாதம் (ஒரு தலையில் அன்பு) கொண்டவளவில் மனவருத்தமடைந்த சேஷன் செருக்கழியப் பெற்றுத் தனது அவதாரமான இத்திருமலையில் தேவர்களின் அளவின்படி ஆயிர வருஷகாலம் கடுந்தவமியற்றித தானே இங்கு என்னை வரவழைத்து (நான் தோன்றும்படியாகச் செய்து) படுக்கை யுருக்கொணடு என்னைத் தாங்குவது போல மலையினுருக் கொண்டும் என்னைத் தாங்குமவனாய் எனது எல்லையற்ற அன்புக்கு இலக்காக இருந்து வருகிறான். என்னாலேயே முன்பு சிறிது வருத்தமடைவிக்கப்பட்ட இவனை, தகப்பனால் வருத்தமடைந்த புத்திரனைப் போல என் கைகளினாலேயே தாங்கிக்கொண்டாடுகிறேன். எல்லாவிடஙகளிலும எல்லாக் காலஙகளிலும எல்லா நிலைமைகளிலும் செய்யத் தக்க எல்லா வகைத் தொண்டுகளில் ஒப்பற்ற ஊற்றமுள்ளவனும் சிறப்பாக இத்தலத்தில் எல்லாவிதமாகவும் பணிபுரிவதில் ஊக்கமுடையவனாய் எனது அந்தரங்கத் தொண்டனாயிருந்து எனது அன்புக்கு மிகமிக இலக்கானவனன்றோ அந்த ஆதிசேஷன். ஆதலால் அவனுருவமுடைய இந்நாகாபரணத்தைக் கையிலேயே சாத்துங்கள்' என்று கட்டளையிட, அதைப பரிஜனங்கள் பெருமாளுடைய வைகுண்டஹஸ்தத்தில அணிவித்தனர்.

சேஷ வாயு விவாதத்தில் சேஷ பருவதத்தைக் கொணடுவரும குதூஹலஙகொணட பெருமாள வாயு தேவனிடம ஓரங்காட்டியதும் அதனால் சிறிதளவு வருந்திய சேஷன் பெருமாளைக் குறித்துக் கடுந்தவமியற்றியதும் சேஷ பருவதத்தில் பகவான் தோன்றுவதற்கு அவன் காரணமாயிருநததும் பகவானுடைய எல்லை கடந்த பிரீதிக்கு அவன் பாத்திரமானதும் புராணங்களினால் அறியப் படுகின்றன.

ப்ராஹம புராணம் சேஷ வாயு விவாதம் முதலத்தியாயததில்-விவாதம் இவ்விதமாக நடைபெற்றபோது ஸர்வேச்வரனாகிய ஹரி அங்கு வந்தார். உங்களுக்கு இச்சச்சரவு ஏன் என்று கேட்டார். நடந்ததையெல்லாம் விவரமாகச் சேஷன் சொன்னான். அது கேட்டுச் சேஷனை வரம்பு மீறியவனாக நினைத்து மேல் நடக்க வேணடிய காரியத்தையும் ஆராயந்த பகவான-எலலோருக்குள்ளும் உயிராயிருப்பவனும் பலத்துக்குரிய தேவதையுமான ப்ராணனும் இந்த வாயுவையே உங்களில் உயர்ந்தவனாக நானும் கருதுகிறேன். உலகத்தை நாமன்றோ சுமககிறோமென்ற பெருங் கருவம் கொணடிருககிறாய் நீ,சேஷா, உன்னையும கூர்மமே (ஆமையே) யன்றோ சுமககின்றது—என்று கூறிய பகவானுககு வாயுவினிடம் ஒரு தலையான அன்புள்ளமை காட்டப்பட்டது.

அதிலேயே இரண்டாமத்தியாயத்தில்—ஆணவம் அழியப் பெற்ற ஆதிசேஷன பிறகு அம்மலையிலேயே ஸ்வாமிபுஷ்கரிணிக்கு வடமேற்கேயுள்ளதும் பல தாழ்வரைகள் சூழப் பெற்றதும் பலவகை மரங்களினால் அழகு செய்யப்பட்டதும் புண்ணியமுமானதோர் மலைச் சிகரத்தில் மனத்திற்கு இன்பமான நாக தீர்த்தத்தில், லோக நாதனான பகவான் (ஸ்ரீநிவாஸனாகத்) தோன்றுவதற்காகத் தேவதைகளின் கணக்கின்படி ஆயிரமாணடுகள் கடுமையான தவம் புரிந்தான். அத்தவத்திற்கு மகிழ்நத பெருமாள் நேரில் தோன்றி, நல்லவனே வரம் கேள் என்று கூற, சேஷன் அடியேன் திறத்தில் தேவரீர் தயையுடையீராகில், ஐயனே இநத வரம் தந்தருள்வீர். அதாவது வைகுந்தமாகிய உயர்ந்த உலகில் எங்ஙனம் என்னுடம்பின்கண் திருக கண் வளர்ந்தருளுகிறீரோ அஙஙனமே இம்மலையுருவம் பெற்ற எனது உடமபிலும் எப்போதும் வாசம செய்தருள வேணடும என பதேயாகும் எனறு வேணடிக் கொணடான். அது கேட்ட பகவான் –நான் விளையாடிக களித்தற்குரிய நல்ல இடம பூலோகத்தில் எங்குள்ளதென்று ஆராய்ந்து பார்த்தேன்— என்று தொடங்கி, இதற்குள் வாயுவுக்கும் உனக்கும் உண்டான விவாதம் காரணமாகப் புண்ணியமான இம்மலை இங்கு வந்து சோநதது. நீயும் தவம செயது, என்னை இதில வசிககும்படி வேணடுகிறாய். இது எனககு இஷ்டமாய் முன்பு என்னால் கோரப்பட்டதே. ஆகையால் அப்படியே ஆகுக என்று வரம தநதார். அதனால் விஷ்ணு பகவான் உயர்ந்த வைகுந்தத்தை விட்டு இம்மலைக்கு வந்து ஸ்வாமிபுஷ்கரிணிக் கரையில் ஸ்ரீமகாலக்ஷ்மியுடன் கூடிக் களிககிறார்—என்பதிறுதியாக, சேஷன் பகவானுடைய வாயுபட்சபாதங் காரணமாகத் துனபமுற்றதும் அதனால கடுந்தவம் செய்ததும் அதனால் பகவான் தோன்றுவதற்குக் காரணமாயிருந்ததும் கூறப்பட்டன. இவ்விதமாகவே பவிஷ்யோத்தர புராணம் முதலத்தியாயத்திலும் சேஷ வாயு விவாதச் செய்தி காணத்தக்கது.

பிரஹ்மாண்ட புராணத்தில் இரண்டாமத்தியாயத்திலும் - பகவான் தன் முன்னே நிற்கும் சேஷனையழைத்து மகிழ்ச்சியினால் கண்கள் மலரப்பெற்ற

வனாய் மேகம் முழங்கினாலொத்த கம்பீரமான குரலோடு, அனந்தனே உலகில் எனக்குப் பிரியமானவன நீ தவிர வேறொருவனுமில்லை. குற்ற மற்றவனே எனககுப் பிரியமான தொரு காரியத்தை நீ செயய வேண டும். நாரதர் கூறிய வார்த்தை யனைத்துமு நீ கேட்டாயல்லவா? விளையாடுதறகு உரியதோர் இடத்தில் வசிக்க வேணடுமென்பது எனது விருப்பம். நீ பூலோகம் சென்று ஓர் மலையுருவெடுத்து வாசம செய. உன் படத் தொகுதியின்கீழ ஸ்ரீ மஹாலக்ஷ்மியுடன் நான் வசிக்க வேண்டும்—என்று தொடஙகி, ஆதிசேஷன் பகவானுடைய அன்புக்கு இலக்கானமையும் அதனால் அவன் மலையாக அவதரித்தமையும் சொல்லப்பட்டது.

இங்ஙனம் வீரநரஸிம்ஹதேவனெனற பெயருடைய கஜபதி மகாராஜனது காலம் முதலாக ஸ்ரீராமாநுஜ முனிவருடைய காலம் வரையில், முறகூறிய காரணததினால் ஒரு திருக்கையில் மட்டும் நாகாபரணமணிந்து விளங்குமு ஸ்ரீநிவாஸ பகவானைச் சேவித்துவரும் இராமாநுசமுனிவர் நாகாபரண மணிந்துள்ளதற்குக் காரணமாகப் பெரியோர் கூறிய வீர நரஸிம்ஹதேவ கஜபதியின் கதையைக் கேட்டு, திருவேங்கடநாதனை ஸ்ரீநிவாஸ பகவானுக்குச் சேஷனிடத்தில் அதிகப பிரீதியுள்ளமை புராணம் வாயிலாக அறியப்பட்டதனாலும் அதையொட்டிய பிற்காலச் செய்திகளும் அதை உறுதிப்படுததியதனாலுமு பகவானது இரு திருக்கைகளிலுமு சேஷன்வடிவில அமைந்த திவ்யாபரணமு சாத்துவது உசிதம். ஒரு திருக்கையில் இருநது மற்றொரு திருக்கையில் இல்லாமலிருந்தால் அது தகாதது மட்டுமன்றிப் பெருமாளுடைய சோபையைக் குறைப்பதாகவுமு அமையும். பகவானுக்குச் சேஷன் திறத்தில் அன்புள்ளமையை அறிந்து ஆகாசராஜன் முன்பு பத்மாவதியின் திருமணத்தின்போது ஆபரணங்களைத் தருமவன் பெருமாளுக்கு இரு திருக்கைகளிலும் சாத்தத்தக்க இரண்டு நாகாபரணங்களை ஸமர்ப்பித்ததும் அதனாலன்றோ.

பவிஷ்யோத்தர புராணம் பதினோராமததியாயத்தில்—இரணடு நாகாபரணங்களையும் தோள்வளை முதலியவற்றையும் ஆகாச மனனவன் பகவானுக்குத் தநதான்—என்று கூறப்பட்டுள்ளது. இந்த பகவானுக்குச் சேஷனிடம் அனபுளளமை — அனந்தனே எனக்குப் பிரியமானவன் உலகில நீ தவிர வேறொருவருமில்லை—என்று பிரம்மாணட புராணப் பகுதி இரணடாமத்தியாயத்திலுள்ள பகவான் வார்த்தையினாலும், பவிஷ்யோத்தர புராணப் பகுதி பதினான்காமத்தியாயத்தில - ஆதிசேஷன்மீது கண் வளருமியல்புடையவரும் சேஷாசலததில் வசிப்பவரும் எப்போதும் சேஷனிடம் அன்பு கொணடவருமான சார்ங்கமேந்தும் ஸ்ரீநிவாஸனுக்கு பிரம்மோத்ஸவத்தில் முதல நாளிரவில் மட்டுமேயன்றி இரணடாம் நாள் காலையிலுமு சேஷ வாகனத்தில் புறப்பாடு ஆயிற்று - என்றுள்ள வசனத்தினாலும், மறறும் புராணங்களால் அறியப்படும் வேறு சரித்திரங்களாலுமு விளக்கமாகத தோன்றுகின்றது.

முற்காலத்தில் சேஷப்பிரியனை பகவானுடைய கருத்தையறிந்து ஆகாசராஜன் ஸமர்ப்பித்த நாகாபரணங்கள் இரண்டும் காலப் போக்கில் பறியுண்டு போயினவே என்றெண்ணிய பகவான் வேறொரு காரணத்தையிட்டுத் தாமே ஒரு நாகாபரணத்தை இப்போது ஸம்பாதித்துக் கொண்டு விட்டார். மற்றொன்று இல்லாததால் குறையாக இருக்கிறது. ஆகையால் மற்றொரு திருககைக்கும் இன்னொரு நாகாபரணம் ஸமர்ப்பித்தேயாக வேணடுமென்று கூறி அப்படியே செய்வித்து, அவ்விரண்டு நாகாபரணங்களையும் அதிக சோபையை உண்டாக்குவதற்காகத் தோள்வளைகளுடன் சேர்த்து பக்தர்களின் மனத்தையும் கண்களையும்கவரும்படியாகப் பெருமாளுடைய திருக்கைகளில் சாத்துவித்தருளினர். (இராமானுச முனிவர்.)

**நரஸிம்ஹப் பெருமாள்:**

இனி ஸ்ரீநிவாஸ பகவானுடைய கோவிலில் உள்ள ஸ்ரீ நரஸிமஹப் பெருமாளின் சரித்திரம் கூறப்படும். 'புனிதமான ஸ்வாமி புஷ்கரிணியின் மேற்குக் கரையில் சங்கரன் நரஸிம்ஹப் பெருமாளைப் பரம பக்தியுடன் கூடிப் பூஜை செய்தான் — என்று ஸ்காந்த புராணப் பகுதியைச் சேர்ந்த ஸுவர்ண முகரீமாகாத்மியத்திலுள்ள வசனத்தினாலும்,ஸ்வாமி புஷ்கரிணிக கரையில் நீலகணடனாகிய விச்வேசன் (சிவபெருமான்)நரசிங்கப் பெருமாளைப் பிரீதியோடு தியானித்துக் கொணடு பார்வதியோடு சில நாள் வசித்து வந்தார்—என்ற வாமன புராண வசனத்தினாலும், வராக புராணம் முற்பகுதி 61 எண்ணிட்ட இரு பத்தொன்பதாம் அத்தியாயமாகிய அஷ்டோத்தரசத (108) நாமாவளியிலுள்ள—நல்ல பக்தனான நீலகணடனால் அர்ச்சிக்கத் தக்க நரஸிம்ஹனுக்கு நமஸ்காரம்—என்ற வசனத்தாலும் ஸ்வாமி புஷ்கரிணியின் மேலண்டைக் கரையில் சில காலம் தவம் செய்துவந்த சிவபிரானுடைய கண்ணுக்கு இலக்கானவராக அறியப் படுகின்றவரும், அவ்விடத்திலேயே ஒரு கோவிலில் ஸ்ரீ வைகாநஸாகமவிதிப்படியே ஆராதிக்கப்பட்டு வருமவருமான நரஸிம்ஹப் பெருமாள், சிவபெருமானது தவத்தின் பயனாகத் தோன்றினார் என்னும் அபிமானம் காரணமாகச் சைவர்கள் அவருக்குப் பக்கத்தில் அவரது பக்தரான சிவபெருமானையும் பிரதிஷ்டை செய்விக்க வேண்டுமென்று முன்பொரு கால் விவாதம் செய்ய, அப்போது அத்தலத்திலிருந்த வைஷ்ணவர்கள் ராஜஸபைக்குச் சென்று — இத்திருவேங்கடமலை ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து கொணடுவரப் பெற்றதனால்

(37-ம் பக்கம் பார்க்க)

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

(இ) சந்தஸ்: அங்கியான வேதத்தையும் சந்தஸ் என அழைப்பதுண்டு. சந்தஸ் என்றால் உலக நடையில உள்ள யாப்பிலக்கணம், அல்லது வ்ருதத லக்ஷணம எனலாம். எழுத்துககளைக் கணக்கிட்டு வேத வாககியங்களுக்குப் பெயரிடுவதாகும். அவை 7 ஆகும். 1. 24 எழுத்துககள் கொண்ட காயத்ரி, 2 28 எழுத்துக்கள கொண்ட உஷ்ணிக், 3. 32 எழுத்துக கொண்ட அனுஷ்டுப், 4. 36 எழுத்துகளைக்கொண்ட ப்ருஹதீ, 5. 40 எழுத்துக்கள் கொண்ட பங்தி, 6. 44 எழுத்துக்கள் கொண்ட த்ரிஷ்டுப், 7. 48 எழுத்துக்கள் கொண்ட ஜகதீ என 7 ஆகும். இதைத் தவிர விராட் என்பதும் ஒனறு உணடு. அவை 4 வகைகளாகும். இவைகளுககும மேல் அதிச்சநதஸ் ஸுக்கள். அவை 14 ஆக 24 எழுத்துக்கள் முதல் 104 எழுத்துககள் கொண்ட சந்தஸ்ஸுககள் வேதத்தில் வரும் இவைகளில் எங்காவது ஒரு எழுத்துக் குறைந்தால் அதற்கு நிச்ருத் எனவும் அதிகமானல் அதற்கு புரிக் எனவும் பெயர். அதன்பின் தேவ-அஸுர-ப்ரஜாபதிரிஷி சந்தஸ் என்ற மூன்று உள்ளன. ஒரு எழுத்துளள "ஓம்" என்றப் பிரணவம் தேவீகாயத்ரீ சந்தஸ் வகையைச் சேர்ந்தது. இவைகளை நன்கு அறிந்தவர்களும் சந்தஸ் வகையைச் சேர்ந்தது. இவைகளை நன்கு அறிந்தவர்களும் சநதஸ்ஸா லோகயமோக்ஷம் அடைகிறார்களாம்;

(ஈ) நிருக்தம்: நிருத்தம் என்றால் விளக்கமாகக் கூறுதல் எனப்பொருள். இது வேதங்களின சொல், பொருள்களை ஐயத்திற்கு இடமின்றி விளக்கும் நூலாகும். இதனை யாத்தவர் யாஸ்கர் என்பவர். உதாரணமாக உலகில் கேள்விப்படாத ஜாப்பரி, துர்ப்பரீ என்ற சொற்கள் வேதத்தில் காணப்படுகின்றன. இவைகளை நன்கு விளக்கிக் காட்டுவது இந்நூல். அதனல் வேதங்களில் புதிய எழுத்துச் சேர்தல் வர்ணாகமம் எடுத்துத்திரிபு வர்ணவிபாயயம், எழுத்து மாறல் வர்ணவிகாரம், எடுத்து மறைதல் வர்ணலோபம் என்ற மாறுதல்களுக்கு இந நூலில் வகை காணலாம. இந்த நிருக்தம எனற நூலுக்கு யாஸ்கர், காலவர், கார்பியர், சாதபூணி, தைகிடி என்ற பெரியோர்கள் ஆசிரியர்கள்.

(உ) ஜோதிஷம்; வேதம் ஆணையிட்ட வைதிகச் சடங்குகளை எந்த எந்தக் காலத்தில் செய்யவேண்டும என்பதை நன்கு விளக்கும் நூலே ஜோதிஷமாகும் இது பல சாஸ்த்ரம்—கணிதம் என இருவகை. இதனை முறையே ஆங்கிலம், அஸ்ட்ராலஜி - அஸ்ட்ரானமி என்றுகூறும். பலததை விளக்கும் பலசாஸ்திரத்தில், நவக்கிரகங்கள். இவைகளின் தசை-புத்தி-அந்தரம் என்பன கொண்டு மனிதர்களின் ஜாதகத்துக்குத் தக்கபடி பலனைக் கூறும். கிரகங்களின் அதிசாரம், சாரம், வக்ரம் கெட்ட யோகங்கள், சுபயோகங்கள் இவைகளின் செயல்களையும பலனையும் இது விளக்கும். இந்த கிரகங்களின் தன்மை, வரலாறு, அமைப்பு இவைகளை இந்நூல் விளககுவதுடன் அவைகளின் ப்ரீதிக்குரிய வகைகளையும் கூறும். வானத்தில் விளங்கும் ஜோதிஸஸுக்களான சூரியன, சந்திரன், நக்ஷத்திரங்கள இவைகளைக கொணடு காலம் பலன முதலியன கணிக்கப்படுவதால் இதற்கு ஜோதிஷம எனபபெயா. இந்த சாஸதிரத்தை நான்முகன் ஸூர்யன், வசிஷ்டா, அத்திரி, மநு, பௌலஸ்த்யர் ஜைமினி போன்ற 18 முனிவர்கள் பரப்பினவாகள் என நாரத சம்ஹிதை கூறும. மற்றும் வராஹ மிஹிரா, கல்யாணவர்மா, மந்தரேசுவரர் போன்றவாகள் வெளியிட்ட நூல்களான ப்ருஹஜ்ஜாதகம், ஸாராவளி, பலதீபிகை என்பன ஜோதிஷ சாஸதிரத திற்கு மிகவும் தேவையானவை. இதனைக் கணிதஸ் கந்தம, ஹோராஸகநதம் எனவும் பிரிப்பர். முருக உபாஸகர்கள அனுமத் உபாஸகர்களின் வாககுப் பலிதம் உணடெனபா. இந்த ஜோதிஷ சாஸ்திரத்தின் அடிப்படையில ஆரூடம, கைரேகை சாஸ்திரங்களும் நடைமுறையில் உள்ளன என்பர். ஜோதிஷ சாஸ்திரப்படி நல்லபயன்களைக் கேட்டால் அதை யாருக்கும் சொல்லக்கூடாது. சொன்னல் பலன தாமதமாகும் என்ற பழைய வழக்கம் உண்டு.

(ஊ) கல்பம்: இது வைதிக கர்மாக்களில் பின் பற்றவேண்டிய முறைகளை வகுத்துச் சீர்படுத்திததிச் சொல்லும் சாஸ்திரமாகும். இநதக் கல்பம் என்பது வேதத்தின் கைகளாகக் கூறப்பட்டுள்ளன.

" முகம வயாகரணம் தஸ்ய ஜ்யோதிஷம் நேத்ரமுயச்தே
நிருக்தம் சரோத்ரமுத் திஷடம சந்தஸாம்
விசிதிஃ பதே ||
சிக்ஷாக்ராணம துவேதஸ்ய ஹஸ்தோ கலபான்
ப்ரசக்ஷதே ||

என ஹரதத்தாசார்யர் கூறினர். இதனைப் ப்ரம்ம வித்யா எனவும் நூல் கூறும். "ருக்வேதம் பகவோ அத்யேமி" என்ற சாநதோகயததின வாக்யத்திறகு ஸ்ரீ ஆதிசங்கராசார்யா கல்பத்தைப் பிரம்ம வித்யா என்றே விளககி உபநிஷத பாஷ்யமிட்டார். கல்பம எனற சொல்லுக்குப் பிரயோகம எனப்பொருளும் உண்டு என ஆபஸ்தம்பர் உரைததாா. பட்டபாஸ் களும கல்பட: ப்ரயோக. எனறே பொருள் கூறினர். வேததஙகளில தினந்தோறும செய்ய வேணடிய நிதய கர்மாக்கள். ஏதோ ஒரு சமயததில் ஒரு காரணததை முன்னிட்டுச்செய்யவேணடிய நைமிததிககர்மாக்கள். ஒரு பலனை நாடிச் செய்யப்படும காம்யகர்மாக்கள் என்ற மூன்று கூறப்பட்டுள்ள இவைகளுக்கு முறையே சந்தியாவந்தனம், கிரகண தர்ப்பணம், சுவர்க்காதிகளை விரும்பிச் செய்யும் சோமயாகம் முதலியன ஆகும். அந்த அந்த கர்மாக்களில் இந்த

(இருப்புக)

(35-ம் பக்கத் தொடர்ச்சி)

அப்ராக்ருதமான (இங்குள்ள பஞ்ச பூதங்களால் உண்டாக்கப்படாத) பகவானுடைய இடமாகும்—என்று ஸ்ரீ வேங்கடாசல மாகாத்மியம் கூறும புராணங்களில் எல்லாவிடங்களிலும் கோஷிக்கப்பட்டுள்ளது. இப்படிப பட்ட அப்ராக்ருத விஷ்ணு க்ஷேத்திரத்தில் சிவபிரானைப் பிரதிஷ்டை செய்வது உசிதமல்லவென்று அத்தாட்சிகளை எடுத்துக் கூறி வெகு சிரமப்பட்டு அச்சைவர்களை விலககி விட்டு, அப்போது அங்கிருந்த வைஷ்ணவர்கள் அனைவரும், 'இநத நரஸிம்ஹப் பெருமாள் லக்ஷ்மியோடு கூடியிராமையால் மிகவும் உககிர (பயங்கர) வுருவமுடையவராக இருக்கிறார், மேலும அவ்வபபோது சைவர்கள் சச்சரவு செய்வதற்கும் காரணமாக இருக்கிறார், ஆகையால் இனியும் இவர் மிகப் பிரசித்தமான முறையில் பூஜிக்கப்பட்டு வருவராகில் இக்கொடுமையான கலியுகததில் விதிப்படிப பூஜையும நடவாது, பூஜையில் சில அமசங்களுக்குக் குறைவேற்படுமாயின் இவருடைய திருககண்களின ஊரைக் கொளுத்தும் உக்ரமான பார்வைக்கு உள்ள வேகம் தணியாமல் ஓங்கிவிடும், முற்கூறியவாறு சைவர்களின் தொந்தரவுண்டாவதையும் தவிர்கக முடியாது, ஆகையால இவருக்குப் பூஜை முதலியவற்றை நிறுததிவிட வேண்டுமென்று ஆலோசித்து அப்படியே செய்தனர்' என்று பெரியோர்கள் கூறிய கதையைச செவியேற்ற இராமாநுசமுனிவா — புராணத்தில் பிரசிததமானவரும் திருமங்கையாழ்வாரின் 'வேங்கடத்து அரியை' (பெரிய திருமொழி 7-3-5) என்ற திவ்யஸூகதிககு இலக்கானவரும், 'நல்ல பக்தனை நீலகண்டனல் அர்ச்சிககத்தக்க நரஸிம்ஹனுக்கு நமஸ்காரம்' என்று திருவேங்கடவனது நூற்றெட்டு நாமாவளியில் படிக்கப்பட்டு ஸ்ரீனிவாஸனுடைய பஞ்ச பேரங்கள் (ஐநது மூர்த்திகள்)போல் ஸ்ரீனிவாஸனேடு ஒன்றுபட்டவராகவே அறியப்படுமவரும் இந்த க்ஷேத்திரத்தின் அதிபதியுமாகிய இந்த நரஸிம்ஹப் பெருமாளுக்குப் பூஜையில்லாமலிருந்தால் இந்த க்ஷேத்திரத்திறகு மேன்மேலுண்டாக வேண்டிய வளர்ச்சி அழிந்துவிடும் — என்று நினைதது, 'இவருக்கு ஸ்வாமி புஷ்கரிணியின் மேற்கரையில் தனிக் கோவில் இருந்தால்தான் முற்கூறியபடி சைவர்களின உபத்திரவம் உணடாக நேரும், திருவேங்கடவன் திருக் கோவிலிலேயே ஓரிடத்தில் இவருக்கு இருப்பிடம் கற்பித்தால் அவ்வுபத்திரவம நேர இடமிராது, ஸ்ரீமதானந்த நிலயமென்னும் திருவேங்கடமுடையானது திவ்ய விமானத்துக்கு எதிர்முகமாக இவரைப் பிரதிஷ்டை செய்விததால் இவரது உக்கிரமான பார்வையின் வேகம் தானுகவே தணிந்து, ஒரு வேளை இவரது பூஜையில் சில அம்சம் குறைந்த போதிலும் அது ஊரைக் கொளுத்துதல் முதலிய எக்கெடுதலையும் உண்டு பண்ணுது' என்று கூறித் திருவேங்கடமுடையானுடைய கோவிலிலேயே வடகிழக்கு மூலையில ஆனந்தநிலய திவ்ய விமானத்தைப் பார்ததிருப்பவராக ஸ்ரீநரஸிம்ஹப் பெருமாளைப் பிரதிஷ்டை செய்வித்து, நரஸிம்மன் பூஜிக்கப் படும ஸ்தலததில் பகைவரின் பரிபவம் நேராது என்ற நூற்கொள்கையைத் திருவுள்ளத்தில் கொண்டு, அப்பெருமானுக்கு நித்திய பூஜையும் முறைப்படி நடக்குமாறு செய்தருளினர். (தொடரும்)

---

முன பக்கத் தொடர்ச்சி

மந்திரத்தை குறிப்பிட்ட முறைப்படி குறிப்பிட்ட ஒழுக்கத்துடன குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட வகையில் பயன் படுத்தச் செய்யவேண்டும் எனக் கூறுவதே கல்பத்தின் அடிப்படைக்கொள்கை. வைதீகமான யாகாதிகளைக கூறுவது கல்பம் எனவும், வீட்டில் லௌகிகமாக நடத்தப்படும் வைதிக கர்மாக்களைப்பற்றி விளக்குவது கிருஷ்யம் எனவும் இரு வகைப்படும அதர்வவேதத்தில் யாக பரயோகம் கிடையாது அதில் சாந்திகம் பௌஷ்டிகம் அபிசாரம் போன்றவைகள் சாத்விகர்களான மறையோர்களுக்கு அதிகம் பிடிக்குகாது. ஆனலும் அந்த வேதத்திலும் கௌசிகர் முதலானோர் கல்ப சூத்ரங்கள் யாததுள்ளனர். அதை வைதிகர்கள் ஏற்காததால் அவைகளுக்கு அதிகப் பெருமை கிடையாது. ஆனல் வைதிக கார்யங்களில் ப்ரம்மா அதாவது வைதிகச் சடங்குகளின் முக்கிய இயககுனர் என்று வரிக்கப்படுகிறவர்க்கு உரிய சில மந்திர ப்ரயோகங்கள் மட்டும் அதில் சில சொல்லப்பட்டுள்ளன. இந்த ச்ரௌத கல்ப சூத்ரங்கள் க்ருஹ்ய சூத்ரங்களுக்கு ஆபஸ்தம்பர் முதலானோர் கல்ப சூத்ரங்கள் எழுதியுள்ளனர் நீரையே நாலாபக்கமும் மதிலாக ஆக்கி ஜபம் பண்ணும் அற்புத சக்தி வாய்ந்தவரே ஆபஸ்தம்பர் ஆவார். இந்தக் கல்ப சூத்திரங்களைத் தவிரவும், ஆகம கல்பங்கள் மந்த்ர கல்பங்கள், சாந்தி கல்பங்கள் எனப் பல கல்ப சாஸ்திரங்களும் உண்டு. ஆகமங்களுக்கும் வேதம் போன்ற பெருமையும் வைதிக பரிக்ரஹமும உணடு என்பதை வைதிகர்களில் சிலர் ஏற்கின்றனர். ஸ்ரீ வைஷ்ணவர்கள வேதங்கள் பகவானுடைய மூச்சுக் காற்றுகள் என்பன போல் ஆகமங்கள் பகவானுடைய திருமுகமண்டலத் திருவாய்க் காற்று என்கிறார்கள் இதற்குச் சான்றுக வைதிகர்கள் கூறும் ஒரு செய்யுளாவது;

'' ப்ரஸித்தார்த்தா நுவாதம் யத ஸங்கதார்த்தம் விலக்ஷணம்|
அபிசேத் பௌருஷம் வாக்யம் க்ராஹ்யம்தத் முனிவாக்யவத்||

என்பதாகும். இனிப் புராணங்கள் பற்றிய சிறிய விளக்கம் காணலாம்.

(தொடரும்)

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

**திினசரி பூசைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை**

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல 3-45 வரை : சுத்தி
3-45 முதல் 4-30 வரை ; தோமால சேவை
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிகெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் மதியம 12-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் : 12-00 முதல 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாந்தம்) 2வது மணி.
1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
1-00 முதல் 7-00 வரை: கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள் ஊஞ்சல்சேவை முதலியன
இரவு 7-00 முதல் 8-00 வரை ; சுத்தி, இரவு கைங்கர்யங்கள், இரவு மணி
8-00 முதல் 10-00 (இரவு) **ஸர்வதரிசனம்**
10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாநத சேவைக கான ஏற்பாடுகள்.
10-30 இரவு : ஏகாநத சேவை (ரூ. 50/- டிக்கெட் வாஙகிய நபர்கள் மட்டுமே அனுமதிககப்படுவர்)

**புதன கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை ; சுப்ரபாதம
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட வாங்கிய நபர்கள மட்டுமே அனுமதிக்கப்படுவர்).
3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.
3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை
(அமநதரணோறசவ கிருஹஸ்தாகள் மறறும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபாகள மட்டுமே அனுமதிக்கப்படுவா)
4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மறறும் ரூ 100/- டிககெட் வாஙகிய நபர்கள மட்டுமேஅனுமதிககப்படுவர்)
5-30 முதல 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்:
6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை 2வது மணி
8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**
மதியம : 1-00 முதல் மாலை 7-00 வரை: ஆர்ஜித கல்யாணோறசவஙகள், ஆர்ஜிதபிரம்மோறசவங்கள வாகன சேவைகள, ஊஞ்சல சேவைகள் முதலியன,
இரவு : 7-00 முதல 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன
8-00 முதல் இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்.**
10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாநதசேவைக கான ஏற்பாடுகள்
10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபாகள் மட்டுமே அனுமதிககபபடுவர்)

**வியாழக் கிழமைகளில (ஆர்ஜித திருபபாவாடை, நடைபெறுவதால)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
3-30 முதல் 4-30 வரை : நிதய கட்டளை கைங கர்யங்கள் அதாவது சுத்தி, தோமால, அர்ச்சனை முதல்மணி மற்றும அபிஷேகத்திறகான ஏற்பாடுகள்.
4-30 முதல் 6-00 வரை : அபிஷேகம்
6-00 முதல் 7-30 வரை : மூலவருககு சமர்ப்பணை
7-30 முதல் 9-00 வரை : தோமாலா சேவை, அர்ச்சனை 1-வதுமணி, பலி,சாத்துமுறை முதலியன
9-00 முதல் இரவு 6-00 வரை : **ஸர்வதரிசனம்**
மதியம் 1-00 முதல் மாலை 7-00 வரை : ஆர்ஜித கல்யாணோற்சவம், பிரம்மோறசவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள மறறும் மற்றைய ஆர்ஜித சேவைகள
இரவு 7-00 முதல இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யஙகள், மற்றும் இரவு மணி
8-00 முதல நடு இரவு 10-00 வரை : **ஸர்வதரிசனம்**
10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக கான ஏற்பாடுகள்.
10-30 இரவு : ஏகாநதசேவை (ரூ 50/- டிககெட வாஙகிய நபாகள மட்டுமே அனுமதிககப்படுவர்)

**வெள்ளிக் கிழமைகளில (அபிஷேகம நடை பெறுவதால)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாஙகிய நபாகள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)
3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, கைங் கர்யங்கள், காலை மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்
5-00 முதல் 6-30 வரை : அபிஷேகம
6-30 முதல 8-00 வரை : சமர்ப்பணை
8-00 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை (தனி)
9-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**
இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மணி, முதலியன
8-00 முதல இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்**
10-00 முதல் 10-30 வரை : சுத்தி,
10-30 ஏகாந்தசேவை (ஆர்ஜிதம ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

''கீதாசார்யன்'', இக்கலியில் துவாபரயுக நிகழ்ச்சிகளை நமக்கு உணர்த்தும் நோக்கத்தில், அர்ச்சாவதார திருமேனியில் — திருவல்லிக்கேணித் திருத்தலத்தில் நித்ய சேவை சாதித்து வருகின்றார்.

வேங்கட கிருஷ்ணனாக வந்து நின்ற பார்த்தசாரதியைக் கண்டு தரிசிக்க, திருவல்லிக்கேணி திருத்தலத்திற்குப் புறப்பட்டேன். தேரோடும் திருவீதியிலே மக்கள் வெள்ளம் ஆர்ப்பரித்துக் காணப்படுகிறது. மக்கள் வெள்ளம் இருபுறமும் அழகாகக் காணப்படும் அங்காடிகளின் மத்தியில் சென்று கொண்டிருக்கிறது.

அங்காடிகளில் அன்பர்கள் கூட்டம். பரந்தாமனைப் பார்க்கப்போகும்

# கச்மலம்

பக்தர்களின் கூட்டத்திற்கு இடையே அடியேனும் சென்று கொண்டிருக்கிறேன்

அடியேனின் நடை திடீரென்று தடைப்பட்டது அங்காடிக்கு முன்னால் அமர்ந்துள்ளவருக்கும், அங்கு சென்ற ஓர் அன்பருக்கும் ஒரு மனக்குழப்பம் சில்லரைத்தகராறு. காய்கறி வாங்கச் சென்ற அவர், காசைக் கொடுத்து விட்டதாகக் கூறுகிறார். அங்காடிக்காரரோ அதை வாங்கவில்லை என்கிறார். சில்லரைச் சிறு சண்டை பெரியதாகி விட்டது 'ஏ! ''கசமாலம்' காசை வைச்சுட்டுப் போயயா' என்று கடைக்காரர் கத்த, ''யோய்! நீதானயா 'கசமாலம்'. காசை வாங்கிக்கிட்டு இல்லேன்னு சாதிக்கிறியே'' என்று கத்தக் கூட்டமும், குழப்பமும் மேலும் அதிகரித்துக் கொண்டே போகிறது.

குழப்பத்தையும், கூட்டத்தையும் கட்டுப்படுத்த முடியவில்லை. அடியேனுக்கும் அந்த தைரியமும் இல்லை-துணிவும் இல்லை. பார்த்தசாரதியைப் பார்க்கப்போகும் அடியேனுக்கு - அங்காடிச் சண்டையும் கசமாலமும் புரியவில்லை.

கசமாலத்தின் சிந்தனையோடு, கீதாசார்யனைக் கண்டு தரிசிக்க, திருக்கோவிலுக்குள் சென்று விட்டேன், ''அம்பு'' பட்டத்தழும்பு திருமுகத்தில் தெளிவாகத் தெரிகின்றது. வேங்கட கிருஷ்ணனை வேண்டி நிற்கின்றேன்.

என் கண் முன்னால் - துவாபரயுகத்தின் புண்ணிய பூமியான குருக்ஷேத்ரம் தெரிகின்றது. பகவான் பார்த்தசாரதியாக தேர்த்தட்டில் அமர்ந்திருக்க—அவர் முன்னால் அர்ஜுனன் குழம்பியபடி, மனக்குழப்பத்தோடு நின்று கொண்டிருக்கிறான்

கௌரவசேனைகள் ஒரு பக்கம். பாண்டவ சேனைகள் மறுபக்கம் அதன் மத்தியில் ''கீதாசார்யன'' பார்த்தனைப்பார்த்து — பார்த்தசாரதியாக அமர்ந்துகொண்டு அவன் குழப்பம் தீர உபதேசம் செய்கின்றார்.

'' குதஸ்த்வா 'கச்மல' மிதம் விஷமே ஸமுபஸ்திதம் |
அனார்யஜுஷ்ட மஸ்வர்க்ய மகீர்த்திகரமார்ஜுன ||

''ஹே! அர்ஜுனா! இந்தச் சிக்கலான நிலையில் மேல் மக்களுக்கு ஒவ்வாததும், வானவர் நாட்டின் வழியை அடைப்பதும், பழிக்கிடமானதும் ஆகிய ''கசமலம்'' மனக்குழப்பம், உன்னை எங்கிருந்து வந்தடைந்தது. உன்னிடத்தில் இந்தக் குழப்பம் எவ்வாறு வந்தடைந்தது.

பயமும் பலகீனமும், ஏற்படும் போது 'பாவம்' ஏற்படுகிறது இதை உன் மனத்தில ஏற்படுத்திக்கொள்ளக் கூடாது. உனது மனக் குழப்பத்தை விட்டு விடு. பரிசுத்தமான செய்கைகளை உடையவன் நீ. ஆகவே உனக்கு 'கச்மலம்' ஒவ்வாது இதை இப்போதே உன் மனத்திலிருந்து அகற்று என்று ''கீதோபதேசம'' செய்கின்றார் கீதாசார்யன்.

சாரதியிடம் சரணாகதி கிடைத்துவிட்டது. அவரது திருவடி சேவை திருவல்லிக்கேணி திருத்தலத்தில் திவ்யமாகக்காட்சியளித்தது. அவரது பாதாரவிந்தங்களைப் பற்றிய நினைவோடு திருக்கோவிலைப் பிரதட்சிணமாக வலம் வருகிறேன்.

பிரதட்சணத்தில் ஒரு புத்தகக் கடையில் 'ஸ்ரீமத்பகவத்கீதை' புத்தகம் என் கண் முன் காட்சியளித்தது. உரியவை கொடுத்து உரிமையாளரிடமிருந்து காட்சியளித்த கீதையை பெற்றுக் கொண்டேன். கண்களில் நீர்மல்க ஒரு புத்துணர்ச்சியோடு பக்கங்களைப் புரட்டுகிறேன்.

பார்த்தசாரதி பகன்ற, ''ஸாங்கிய யோகம'' பளிச்சென்று தெரிகின்றது ஸாங்கிய யோகத்தை ''விவேகானந்தா'' விஸ்தாரமாக எடுத்துக் காட்டிய விதமும் புரிந்தது.

''உலகில் பாவம் என்பது உண்டு என்றால் அதுதான் பயமும் பலஹீனமும்இந்த ஒரு சுலோகத்தை ஒருவன் படித்தால் கீதை முழுவதும் படித்த பயன் எய்துகிறான. இந்த ஒரு சுலோகத்தில் கீதையின் தெய்வம் ஆழ்ந்து உறைகின்றது''

கீதையின ரகஸ்யத்தை உணர்ந்து கொண்டு, திரும்பினேன். தேரோடும் திருவீதியில முன்பாக நடந்த ''கசமாலச்சண்டை'' இடம வந்தடைந்தேன்;

குழப்பமும இல்லை - கூட்டமும் இல்லை. அங்காடிக்காரரிடம் அன்போடு விசாரித்தேன். 'காய்கறி வாங்க வந்த அந்தப்பெரியவர்காசை காய்கறிக்கு மத்தியில் போட்டுவிட்டார். அதை நானும் பார்க்கவில்லை. அவரும் கவனிக்கவில்லை. பிறகு இரு

திரு. எம். எஸ் பிச்சுமணி:
சென்னை.

# திருமலையில்

## தி. தி. தேவஸ்தான

# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| எண் காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| பெரியன | ரூ. 40/- |
| சிறியன | ரூ. 20/- |
| ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| திருமணக் கூடம் (3வது சத்திரம்) | ரூ. 15/- |
| சிறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |
| **எஸ். வி. விருந்தினர் விடுதி,** | |
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடிபவன் | ரூ. 100/- |
| **திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)** | |
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண்: 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண்: 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண; 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண் : 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண் : 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள் பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி. பி. சி. ஒரு அறைத் தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

ருமே தெரிந்து கொண்டோம். குழப்பமும் தீர்ந்துபோச்சு. இருவரும் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டோம்' என்ற மனப்பக்குவ நிலையில் கூறினர்.

பகவான் போதித்த ''கச்மலம்'' பக்தர்களின் முன்னிலையில் 'கசமால' மாக மாறி உபதேச மொழியாகவும் வநததை எண்ணப் பார்க்கிறேன. இந்து மதம் அமைத்தப் பாதையைப் பார்க்கிறேன். தடைகள் இல்லாமல் செல்லும் வழியை நமது பெரியோர் அமைத்த விதத்தை எணணி வியக்கிறேன்.

முன் சொன்ன யுக கால தர்மங்கள் அவ்வப்போது நமது நினைவுகளில் திருத்தல யாத்திரியை மேறகொள்ளும் போதும, பகவானைப் பாரத்துத தரிசிக்கும போதும அனுபவ பூர்வமாக உணர்கின்றோம.

கீதையில் கண்ணன் உபதேசித்த ''கச்மலம்'' கீதாசார்யனக வநது நின்ற திருத்தலமான திருவல்லிக கேணியில் ''கசமலாம'' என று மாறிய விந்தையை எணணி எணணி பார்க்கின்றேன். உயர்நத ஒரு தததுவச் சொல் யுகம மாறினுலும மாறுபட்டச சொல்லாக மலர்நதாலும அதன வலிமையை மீணடும் எண்ணிப் பார்ககிறேன்.

''கசமலம்''— என்ற சொல ''கசமாலம்'' என்று மாறியது விநதையில்லை. ''கசமாலம்'' என்ற சொல் திருவல்லிககேணித் தலத்தைத் தவிர வேறு அதிகமாக எஙகும கேட்க முடியாத ஒருசொலஎன்பதைக கேட்கும் போது விந்தையிலும் விந்தையாகவே உள்ளது.

திருவல்லிக்கேணித் திருத்தலத்தைச சுற்றியுளள சென்னைப்பகுதியில்தான் இந்த ''கசமாலம்'' சொல்லப்பட்டு வருகின்றது.

நமது ''கச்மலம்' நீங்க 'கசமாலம்' நிகழ்ச்சி ஒரு உபதேச வாககியமே யாகும். 

# எமை ஆளும் பரம புருஷன்

பிறவி எடுதத பயன் யாதெனின் ஈஸ்வரனின (விஷ்ணு) திருவடியை நினைந்து கடைசியில் அவனது திரு வடியைப் பற்றுதலாம். நாம் பிறவி எடுத்தவுடன் அவனது திருவடியை எப்படிக் காண்பது. காண முற்பட் டாலும் காண இயலுமா என்ற கேளவி எழுகிறது. இக்கேள்வி பதில் கூறுமுகத்தான், ஆழ்வார்கள் தாங்கள் கண்ட நற்காட்சியினைப் பாசுரங்களாக அமைத்து நமக்கு நல்கியுள்ளனா. அப்பாசுரங்களை நாம் தினம் மனதினை ஒரு நிலைப் படுத்தி அவனது திருவடியின் முன் நின்று மெய் உருகி பாடுவோமே யானால் அவன் தரிசனம் நிச்சயம் கிடைக்கும்.

திரு. S. நாராயணஸ்வாமி, M A., B Ed
திருஇன்னம்பூர்.

பரம புருஷனை நினைத்தல் :

பரம புருஷன் என்பவன் நம்மை விட உயர்ந்தவன். அவன் எப்போதும் சகல கல்யாண குணங்களுடன் இருப் பவன். எல்லாமும் அறிந்தவன் முதல் மூன்று ஆழ்வார்களான பொய்கை ஆழ்வார், பூதத்தாழ் வார், பேயாழ்வார் முதலான இவர் கள் திருக்கோவிலூர் ஸ்ரீஉலகளந்த பெருமாளினை நினையுங்கால் எம்பெ மான் கருடத்தின்மேல் பவனி வ அருளினன் எனபது கண்கூடு.

103 திவ்ய தேசங்களில் பல தோற் றங்களில காணப்படும் இப்பரந்தா மன் கண்டும, கண்டதை நினையுங் கால் - நினைத்தாலே நெஞ்சமெல் லாம் இனிக்கும்.

வைஷ்ணவ தத்துவம் :

மற்றைய சமயங்களைக் காட்டிலும் இது சற்று மேலோங்கி உள்ளது. சங்கரர் அத்வைதம் என்றும், மாத் துவர் துவைதம் என்றும் கூறுகை யில் ஸ்ரீ ராமானுஜர் விசேஷ அத்வை தம் எனறு கூறுகிறார்.

வைஷ்ணவம மூன்று பொருள்களை ஒப்புக் கொணடுள்ளது (சித, அசித், ஈஸ்வரன்) ஈஸ்வரனின் மூலம வெளிப் பட்டும் கடைசியில் ஒடுக்கமாகவும் இருக்கிறது உயிரும் பொருள்களும் அவனிடத்தில் வந்தன. பிறகு அவ னிடத்தில் சேருகின்றபோது எவ்வித பேதமில்லாமல் இருக்கின்றன.

உயிர்கள் இவ்வுலகில் இருக்கும் பொருள்களை நம்பி வாழ்கிறது. நாட் கள் செலலச் செல்ல பொருள்களின் நிலையாமையை உணர்ந்து பரமனின் திருவடியை நினைந்து இணைவதே வைணத்தின் குறிக்கோளாகும்.

விஷ்ணுவின் ரூபம் :

வைஷ்ணவ சம்பிரதாயப்படி விஷ்ணுவை மூன்று நிலைகளில் வைத்து வழிபடுகின்றனர். 1. நிற் கின்ற நிலை (நின்றனன்) 2. அமர்ந்த நிலை (இருந்தனன்), 3. சயன நிலை (படுத்திருக்கும் நிலை). இதனை விளக்க வந்த நம்மாழ்வார் தம் பாசுரத்தில்,

'' நின்றனரிருந்தனர் கிடந்தினர் திரிந் தனர்
நின்றிலரிருந்திலர் கிடந்திலர் திரிந் திலர்
எனறு மோரியலவின ரென நினை வரியவர்
என்றுமோரியல்வொடு நின்றவெந் திடரே''

என்று தெளிவு செய்கின்றார்.

சைவத்திற்கும் வைஷ்ணவத்திற் கும் சற்று மாறுபட்ட நிலையும் காண லாம் இவ்விடத்தில். சைவாலயங் களில் சிவபெருமான் குரு லிங்க சங்கம வடிவில் இருந்து கொண்டு மெய்யடியார்களுக்கு அருளுகின்றான் என்பது சைவர்கள் கோட்பாடு. ஆனால் வைஷ்ணவர்கள் கூறுகின்ற போது அவனது 108 திருப்பதிகளில் நின்று, இருந்து, கிடந்து அருளுகின் றான் எனக் கூறுவது தனிச் சிறப்பே ஆகும்.



ஸ்ரீ பத்மாவதி தாயார் சமேத ஸ்ரீ வேங்கடேஸ்வரர்,
அனுப்பியவர் : திரு. ராகவன், திருப்பதி.

**பரமனின் விளக்கம் :**

ஸ்ரீமந் நாராயணன் அநந்தகோடி சூர்ய பிரகாசமாய் ஜொலிக்கின்றான். அவனுக்கு நான்கு கரங்கள். அவைகளில் சத்திய சங்கும், சுடராழியும் (சக்கரம்) கதையும் தாமரையுடன் கூடிய அபய ஹஸ்தமும் (அருளும் திருக்கரம்) கொண்டு தன் திருவடிகளை தாமரையிலே பதித்தும், நெற்றியில் திருமண் சாற்றியும் நவரத்தின கிரீடமும், கௌஸ்துப மணி துளசி மணி, முப்புரி நூல், லட்சுமி முதலானவைகளை திருமார்பில் தாங்கியும் உள்ளான். பட்டாடைகள், மேலும் அவனது மேனியை பொன்மயமாக ஆக்குகின்றன என்றும், பஞ்ச கிருத்தியங்களை தான் கொண்டு வருகிறான் என்றும், தருமம் தன் நிலையிலிருந்து குறையும்போது அவதாரமேற்று (தசாவதாரம) 'துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம்' செய்து இவ்வுலகை ரட்சிக்கின்றான் என்றும் உணர்ந்தவர்களான பார்த்தனுக்கும், ருக்மணிக்கும் தன் திவ்ய விஸ்வரூபத்தை அருளியவனும் அவனே.

**திருமண் விளக்கம :**

வைஷ்ணவ அடியார்கள் தங்களது திருமேனியில் வைஷ்ணவச் சின்னமான திருமண் தரிக்கின்றனர். இதன் இரண்டு பகுதிகளான (வெண்மையான பகுதி) பெருமானது பாதங்களாக உணரப்படுகின்றது. நடுவில் தனித்து இருக்கும் திருச்சூரணம் (சிவப்பு) எம்பெருமானது திவ்ய ரூபமாக தியானித்தல் ஆகும்.

உயிரும் உலகமும் எப்போதும் இணைந்து இருக்கும். அது என்று, இந்த உலகம் பொய்யானது என்று உணருகின்றதோ அப்போது தனித்து இருக்கும் பெருமானின் திருவடியை அடையும்.

வைஷ்ணவ சித்தாந்திகள் கூறுமாறு போல சித், அசித், ஈஸ்வரன் என்ற உண்மையை உணர்த்த வந்ததுதான திருமண் அணிதல். ஆகவே தத்வார்த்தமாக தங்கள் மேனியில் 12 இடங்களில அணிகின்றனர்.

**தசாவதார ரகசியம :**

1. உலகில் முதலில் தோன்றியது நீர் அதில் தோன்றியது தான் (மீன்) மச்சாவதாரம். 2. நிலத்திலும் (தரை) தண்ணீரிலும் வாழும் ஒரு ஜீவன் தோன்றியதுதான் வராக அவதாரம். 3. தண்ணீருக்கு

# பரமன் அருள் பெற்ற பல்லி!

பல்லிக்கும் சொல் திறன் உண்டு! 'பல்லி சொல்லுக்குப் பலன்' என்று ஒரு தலைப்பே போட்டுப் பஞ்சாங்கங்களில் விளக்கம் கொடுத்திருப்பார்கள்! அதே போன்று பல்லி விழுந்தாலுங்கூட நாம அதற்குரிய பலனையும் பஞ்சாங்கங்களில பார்த்துத் தெரிந்து கொள்ள விரும்புகிறோம்! வீடுகளில சாதாரணமாகக் காணப்படும பல்லியும கூட ஆராதிக்கப்பட்டு வருகின்றது! ஆமாம்! கோயிலில அதற்கு ஒரு தனிச் சந்நிதியும் இருக்கிறதென்றால் ஆச்சரியமாகத்தானே இருக்கும்! இந்த சந்நிதி எங்கேயிருக்கிறது? சிதம்பரத்தில்தான! வரலாற்றைப் பார்ப்போம!

ஒரு ஜோதிடன் கோதாவரி தீரத்தில் பொய் ஜோதிடமே கூறிக் கொண்டுத் தன் பிழைப்பை நடத்தி வந்தான! பூர்வ ஜன்மப் பயனால் பல திருத்தலங்களைக் கண்டு, இறைவனை வழிபட்டுக் கொண்டு வந்தவன், தில்லையில் ஆனந்தக் கூத்தனையும் தரிசித்துக் கொண்டு சிறிது காலம் தங்கியிருந்தான். அங்கேயே உயிர் துறந்தான். மறுபிறவி யெடுத்தான்! முற்பிறவியில் தலயாத்திரை செய்து வந்த நற்பலனாய், மறுபிறவியில் பல்லியாகப் பிறந்தான்! பல்லியாயினும், தில்லையிலேயே அம்பலவாணரைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்றான்!

தன்னுடைய இழி பிறவிக்கு வருந்தி, சிவனை மறவாமல் தியானித்துக் கொண்டிருந்தான்!

கனக சபாபதி கருணைக்கடலன்றோ! அகம் மிக மகிழ்ந்தார்! தன் கருணையைக் காட்டி. அப்பல்லியை நோக்கி 'அழகா!' என்று அழைத்தார் ஈசனார்! பல்லி உருவம் நீங்கி, அழகனாகவே ஈசன் முன் நின்றான்!

பரமனும் மிக மகிழ்ந்து, 'நீ இன்று முதல தில்லைத் திருத்தலத்தைக் காவல் புரியும் க்ஷேத்ர பாலகனாய் 'அழகர்' என்ற திருப் பெயருடன் அழைக்கப்படுவாய்! நீ அடியார்களுக்குத் திருவருள் பாலித்துக் கொண்டு இருப்பாயாக!' என்று பணித்து 'கதை'யையும் ஈந்தருளி மறைந்தார், மறை முதல்வன!

தில்லைக் கோயிலிலேயே 'அர்த்த ஜாம அழகர்' என்ற சந்நிதி ஒன்றுண்டு; அர்த்த ஜாம பூஜை உண்டு! நறுமணம் மிக்கத் தாம்பூலப் பிரியரானதால், நறுமணத் தாம்பூல நிவேதனம செய்யப்படுகின்றது! சித் ஸபேசனின் கீழ்க்கொடுங்கையில ஒரு பல்லி உருவமுமிருக்கின்றது. திருமூலட்டானப் பிராகாரத்தில் 'தட்சிணாமூர்த்தி'யின் சந்நிதிக்குக் கீழ்ப்புறம் பல்லிக்கருளிய ஈசனார், 'பல்லீஸ்வரர்' என்று விளங்குகிறார்!

பல்லியால் ஏற்படும் சகல தோஷங்களும் நீங்க, அருள் பாலிக்கின்றார்! சென்று பாருங்கள்! திருவருளை நாடுங்கள்!!

ஆதாரம் : திருச்சிற்றம்பலம் கோயில்.

**தகவல்: திரு. எம் எஸ். பாலசுப்ரமணியன்-தேன்பதி.**

மேல் இந்த உலகத்தை தாங்கி நிற்க எடுத்தது கூர்மாவதாரம். 4. மிருக முமில்லாமல் மனிதனுமில்லாமல் ஒரு பிறவி எடுத்தது நரஸிம்மாவதாரம். 5. உருவத்தைக் கணடு எண்ணுமல் கீர்த்தியுடன் செயல்படும் ரூபம்தான் வாமனுவதாரம் 6. தந்தை சொல்லே மந்திரம் என்ற நோக்கால் எடுத்த அவதாரம் பரசுராம அவதாரம். இப்படிததான் வாழ வேண்டும், பொறுமை கடலினும் பெரிது எனற கொளகையையும ஏக பததினி விர தஞக நிலை நாட்டவந்ததும் இராமாவ தாரம. 8 மனிதன தன பலத்தினு லும் வல்லவஞக வாழலாம் எனறதை நிரூபிக்க எடுத்தத பலராமாவதாரம. 9. துஷ்டர்களேயும, தர்மததை அழிப்பவாகளேயும் தன யுகதியினுலே வென்று கடைசியில தாமததை நிலை நிறுத்த எடுத்தது கிருஷ்ண அவ தாரம. 10 மனிதன் தன சுக போகங்கள் கருதி தனக்குத் தானே அழிவை தேடிக் கொள்கிருன் என் பதை உணர்த்த. வருவது கல்கி அவ தாரம்.

பன்னிரு நாமங்கள்:

வைஷ்ணவர்கள் தன் மேனியில் தரிக்கும் 12 திருமண்கள் (திருநாமம் இட்டுக் கொள்ளுதல்) - பரம புரு ஷரான ஸ்ரீமந் நாராயணனது திவ்ய நாமங்களே. அவையாவன: 1. ஓம கேசவாய நம:, 2 ஓம் நாராயணுய நம:, 3. ஓம் மாதவாய நம:, 4. ஓம் கோவிந்தாய நம:, 5. ஓம் விஷ்ணுவேய நம;, 6. மதுஸூதநாய நம:, 7. ஓம திரி விக்ரமாய நம:, 8. ஓம வாமநாய நம:, 9 ஓம ஸ்ரீதராய நம:, 10. ஓம் ஹ்ருஷீகே சாய நம:, 11 ஓம் பத்மநாபாய நம:, 12 ஓம தாமோதாராய நம:

கருட சேவை:

எமபெருமான் கருட வாகனத்தில் அமர்ந்து காட்சியளிக்கின்ருர். கரு டன் நான்கு வேதங்களின அம்ச மாகும். கருடப் பறவையின் கண் கூர்மையானது. அதுபோல எம்பெரு மானது நேத்திரங்கள் அதனின் கூர்மையாக இருந்து சிருஷ்டி முத லான ஐந்தொழில்களை செய்து வரு கின்றுன எத்தனை தரிசனம இருந தாலும் கருட தரிசனத்திறகு ஒப் பாகாது. வியாழன் கருட தரிசனத் திற்கு ஏற்றது.

ஏறறுக்கொள்பவன பரமன:

வைஷ்ணவர்கள் தங்களது தத்து வார்த்தமாக பரம புருஷனை (விஷ் ணுவை) ஈஸ்வரன் எனறு அழைக கின்றனர். இவனே வேத நாயகன். பஞ்ச கிருத்தியங்களுக்கு அதிபதி. சகல சம்பத்தையும் எபபோதும அடி யார்களுக்கு கொடுக்க வேணடி மார் பிலே லெட்சுமியை தாங்கி இருப் பவன. உயிர்களை உணரச் செய்து கடைசியில் தமமில் சேர்த்துக் கொள் பவன

இரண்டு மார்க்கம.

தன்னை வந்து அணடின அடியாருக் கும் அருளி, தன்னிடம் அண்டாத (நெருங்காத அல்லது எதிர்க்கும்) அன்பருக்கும் உணர்த்தி ஏற்றுக் கொள்ளுதல் தனிச் சிறப்பே ஆகும். இதனை மார்கட மார்க்கம் (தாய்க் குரங்கும் தனது குட்டிக் குரங்கும் போல) மார்ஜர மார்க்கம் (பூனையும் தன் குட்டியும் போல) முதலான இரணடு மார்க்கத்தை ஏற்றுக் கொண்டு வைஷ்ணவர்கள் எம்பெரு மானை சேவிக்கின்றனர்.

உயர் காயதரி:

எம்பெருமானின் காயத்திரியான,

"ஓம நாராயணுய வித்மஹே |
வாஸுதேவாய திமஹி |
தந்நோ விஷ்ணுபரசோதயாத் ||"

என்ற ஒன்றினுலும் அல்லது அஷ் டாட்சரமான "ஓம் நமோ நாரா யணுய நம:" என்ற மந்திரத்தினுலும் நாம் நினைப்போமேயானுல் நமக்கு இக பர சௌபாக்கியம் தந்து அருளு பவன் எமை ஆளும் பரம புருஷஞ கிய ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே ஆவான்.

"பரமனின் திருவடியைப் போற்று வோம்".

★

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. பை |
|---|---|---|
| அன்னமய்யா ஓர் அறிமுகம் | ... | 1–00 |
| பகவத் சந்தேஸம் | ... | 0–50 |
| இந்து சமயக் கையேடு | ... | 1–50 |
| ஹனுமான் | ... | 0–50 |
| கண்ணன் பேசுகிறான் | ... | 0–50 |
| மாங்கல்ய விருத்தி ஸ்தோத்திரம் | ... | 0–10 |
| சித்திர சுப்ரபாதம் | ... | 8–00 |
| ஸ்ரீவேங்கடேஸ்வர சுப்ரபாதம் (பொருளுடன்) | ... | 0–50 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | ... | 0–15 |
| சித்தாந்த சங்கரஹம் | ... | 2–50 |
| திருவேங்கட கலசம் | ... | 0–15 |
| சித்திரத் திருப்பாவை | ... | 8–25 |
| ஏழுமலை யாத்திரை | ... | 0–75 |
| ஹனுமன் கதை | ... | 2–00 |
| திருமலை வழி காட்டி | ... | 0–10 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரா கல்யாணம் | ... | 11–50 |
| கண்ணன் கதை | ... | 2–00 |
| நித்யானுஸந்தானம் (வடகலை) | ... | 4–00 |
| நித்யானுஸந்தானம் (தென்கலை) | ... | 4–50 |
| அபிமன்யு | ... | 2–00 |
| கிருஷ்ணனும் நரகாசுரனும் | ... | 2–00 |
| பகவத் கீதை | ... | 2–00 |

## ஆங்கிலம்

| | | Rs. Ps. |
|---|---|---|
| Administration of Temples | .. | 5—00 |
| Alamel Mangapura | .. | 0—25 |
| Ekantaseva | .. | 5—00 |
| Govinda brochure | .. | 3—00 |
| History of Tirupati Vol: II | .. | 15—00 |
| Melodies of staff notation | .. | 10—00 |
| Lord Venkateswara & Alwars | . | 1—00 |
| Acharya Hridayam | .. | 8—25 |
| Theory of Knowledge | .. | 5—00 |
| Tirupati Sri Venkateswara | . | 40—00 |
| S.V. Suprabhatham with meaning | .. | 0—50 |
| Heart of Bhagavatham | .. | 3—00 |
| S.V. Sachitra Suprabhatham | .. | 11—00 |
| Tirumala Temple | .. | 80—00 |
| Pilgrimage to Uttarakhanda | . | 3—75 |
| Tiruppavai | | 10—00 |
| Vision of Aryan Glory | | 1—50 |
| Uddavageetha | | 5—00 |
| The Wise Minister & other stories | | 1—00 |
| Sree Venkateswara | | 1—00 |
| Vishnu Sahasranamam 999 (Namams) | . | 1—00 |
| Hariscbandra | | 1—00 |
| Kardama & Devahuti | | 1—00 |
| Maharshi Valmiki | | 2—00 |
| Druva | | 2—00 |
| Bhishma | | 2—00 |
| Vedavyasa | | 2—00 |
| Tenali Ramakrishna | | 2—00 |
| Ganesha | .. | 2—00 |
| Thyagaraja | . | 2—00 |
| Drowpadi | | 2—00 |
| Bhageerada | .. | 2—00 |
| Prahlada | | 2—00 |
| Andal | | 2—00 |
| Kalidasa | .. | 2—00 |
| Vadiraja | .. | 2—00 |
| Pillai Lokacharya | . | 2—00 |
| Dhadhichi | . | 2—00 |
| Nachikata | .. | 2—00 |
| Namadeva | .. | 2—00 |
| Garuda | .. | 2—00 |
| Ramanujacharya | .. | 2—00 |
| Narada | .. | 2—00 |
| Vedantadesikaru | .. | 2—00 |
| Why am I Hindu? | .. | 1—50 |
| Purushasuktham | | 2—00 |
| History of Tirupati Vol I | . | 15—00 |
| Homage to Kalankari | . | 120—00 |
| Yoga & Yoga | | 2—00 |
| Viswamithrudu | | 2—00 |
| Idle child | | 0—05 |

## வடமொழி

| | | ரூ. பை. |
|---|---|---|
| எஸ். வி. அஷ்டோதரம | .. | 0–62 |
| எஸ். வி. சுப்ரபாதம் | .. | 0–12 |
| தத்வ ஸங்க்யானம் | .. | 2–00 |

---

குறிப்பு: பிரதிகளுக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

THE WELFARE OFFICER
Publication Wing (Administrative Building)
T. T D TIRUPATI

"சான்றோருடைத்து தொண்டை நன்னாடு" என்பது ஔவையின் அமுத வாக்கு. 'வாழையடி வாழையெனச்' சான்றோர் பலரை வையகத்துக் களித்து வருவது தமிழ்த் தொண்டை நன்னாடு என்பது கண்கூடு.

தெய்வநலம் வளர்க்கும் சான்றோர் கட்குத் தொண்டை நன்னாட்டில் என்றுமே பஞ்சம் வந்ததில்லை. அச் சான்றோர்கள் வளர்ந்து அருந்தொண டாற்றியதைப் பற்றி நாம ஏட்டில் மட்டுமே படித்தறிய முடிகிறது நேரில் சேவித்தறிய முடிந்ததில்லை. அன்னாரின் செயற்கரிய செயல்களைப் பற்றி நாம் படிக்கும் போது அவை யனைத்தும் கற்பனையோ என்று கூடச் சிலர்க்குத் தோன்றுவதுண்டு. அதனாலேயே ஒரு சிலர் சான்றோர்களின் வாழ்க்கை வரலாற்றினை உண்மை யென்று நம்ப மறுக்கின்றனர்.

சன்மார்க்க சீலர்; சமயப் பொறை யாளர்; எழுத்தின் வேந்தர்; இன் னிசைப் பேச்சாளர்! தளராத உள்ளத் தார்; தாளாண்மை மிக்கவர்; வாதத் தில் வல்லவர்; வாஞ்சைக்கு நல்லவர்; உணர்தற்கு அரியவர்; உலகத்தில பெரியவர்

இப்பெருமானின் பண்பு நலன் களைப் பற்றி முழுவதும் அறிந்துரைப் பது என்பது யானை - கண்ட குருடர் களின் கதையாகத்தான் முடியும். எனவே, இப்பெருமானின் அருட் பண்புகள் சிலவற்றை மட்டுமே சிறி யேனாகிய என்னால் குறித்தல இய லும். அதுவும் அப்பெருமானைப் பற்றி அடியேன் அறிந்ததை மட்டும எடுத்துக் கூறாமல் அறிஞர் பெருமக் கள் சிலரின் கருத்துக்கள் சிலவற்றை யும் கூறி ஒருவாறு இக்கட்டுரையை நிறைவு செய்கின்றேன்.

னும் கட்டுரையில் ஒரு பகுதியில் இருந்து இதற்கு விடை காணலாம்.

"நம் ஸ்வாமி 1889-ஆம் ஆண்டு விக்ருதி பங்குனி விசாக நட்சத்திரத் தில ஸ்ரீ. ப்ர.ப- அண்ணா ரங்காச்சாரி யார் ஸ்வாமியின் திருப்புதல்வராக ஜனித்தார். மஹா வித்வான் ஸ்ரீ. அண்ணா ரங்காச்சார்யர் ஸ்வாமி காஞ்சி ஸம்ஸ்க்ருத வித்யாலயத்தில் ப்ரதான பண்டிதராகப் பணியாற்றி னார். அவருடைய ஒரே புதல்வரான நம் ஸ்வாமிக்கு 14 வயது நடக்கும் போது தம்முடைய 43வது வயதில் திருநாட்டை அலங்கரித்தார். இந்தப் பதினான்கு வயது நிரம்பாத குறுகிய காலத்திலேயே ஸ்ரீவைஷ்ணவ ஸம் ப்ரதாயத்தில் திளைத்த ஆஸ்திகராக வும், ஸமஸ்க்ருத வ்யுத்பத்தி நிரம் பினவராகும்படித் தம் புதல்வருக்கு வித்யை புகட்டினார். பிறகு ஜகத்

# அண்ணங்கரரின் அரும் பண்புகள்

அத்தகைய சிறப்புமிக்க சான்றோர் களின் வாழ்க்கை கற்பனையல்ல, நடக் கக்கூடிய உண்மை வாழ்க்கையே என் பதனைக் கண்கூடாக நாம் கண்டு தெளி யுமாறு கருணை புரிந்தவர் கலைமலிந்த கச்சிப்பதியில் அவதரித்துச் சமயமும் சான்றாண்மையும் செழித்தோங்க உதவி புரிந்த தெய்வத் திருவினர் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச் சார்ய சுவாமிகள்.

அவ்வப்போது அவதரித்த ஆழ் வார்களையும், ஆச்சார்யர்களையும் காணும் பேறு பெறாத நம் கண் களுக்குத் திவ்விய தரிசனம் தந்த பெருமான்! இனி வருங்காலத்தில் பிறப்பவர்களுக்குக் கிடைக்கப் பெறாத அரிய வாய்ப்பினை நமக் களித்த அவதாரச் செம்மல்!

சுவாமிகள் கல்விக்கடல்; கருணை ஊற்று; பண்பின் உறைவிடம்; பன் மொழிப் பெட்டகம்; வைணவத் தில கம்; வாழ்வுக்கோர் வழி காட்டி;

**கல்விக் கடல**

சுவாமிகளின் கல்விச் சிறப்பை எடுத்துக் கூற யாராலும் இயலாது. ஏனெனின், அவரைவிடக் கற்றறிந் தவர் வேறு யாருமிலர்! கடலின் நீளம், அகலம், ஆழம் ஆகியவற்றைக் கண்டறிய முற்படுவதைப் போன் றதே சுவாமிகளின் புலமைப் பரப் பையும் நாம் கண்டறிய முற்படுவது. எனினும் கடலின் கரையில் நின்று அதன் காட்சியினைக் கண்டு களிக்க முடியுமல்லவா!

சுவாமிகள் கல்விக்கடலாகத் திகழ முடிந்தது எப்படி? 1-7-64 தேதி யிட்டு வெளியான டாக்டர் வி வி. இராமாநுசம் அவர்களின் "ஸ்ரீ உப. வே. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சார்ய ஸ்வாமியின் வாழ்க்கையும் சாதனைகளும்" என்

மாருதிதாசன்
காஞ்சிபுரம்.

குரு. ஸ்ரீகாதி அனந்தாசார்ய ஸ்வாமி தர்க்கம், வ்யாகரணம், மீமாம்ஸா வேதாந்திர சாஸ்திரங்களை அப்யா ஸம் செய்வித்தார். தவிர காஞ்சீ இளங்காடு ரங்காச்சாரய ஸ்வாமி இளையவில்லி ஸ்ரீராமாநுசாச்சார்ய ஸ்வாமி, மத்வ வித்வான்களான ஸ்ரீராமசந்த்ராசார், ஸ்ரீவித்யாசார் முதலான வித்வான்களிடத்திலும் ஸ்வாமி சாஸ்த்ராப்யாஸம் செய் திருக்கிறார்."

"இருபத்திரண்டு வயதிற்குள் ஸ்வாமி தனது வித்யாப்யாஸத்தைப் பூர்த்தி செய்திருக்கிறார். வேதங் களைப் பயின்று அதனுள் செய்த ஆராய்ச்சியின் பயனாக ஸ்வாமி வைதிக வ்யாகரண க்ரந்தமான 'வேதாத்யயன' ஸர்வஸ்வம் முத லான நூலகளை எழுதி வெளியிட் டார்."

**கருணை ஊற்று**

கல்விக் கடலாக விளங்கிய ஸ்வாமி கட்குச் சிறிதும் வித்யாகர்வம் என்

பது எப்போதும் இருந்ததில்லை அவர் கருணையே வடிவமாக விளங்கி னூர். தம்மை நாடிவந்தவர் யாவரா யினும் அவர்கள் உகக்கும் வண்ணம் அரும்பெரும் உதவிகள் செய்து வந் தார்; உணவளித்து உபசரித்தும், உடை தந்து ஆதரித்தும், பொருள் தந்து வழியனுப்பியும் வைக்கும் அவ ரது கருணை உள்ளத்தை நினைந்து நினைந்து நெஞ்சுருகி அழுவார் சிலரை இன்றும் காணலாம்.

பண்பின் உறைவிடம் :

அன்பு என்னும் பண்பு சுவாமி களிடம் நிரம்பியிருந்தது. நம்மைக் காண வருவாரிடமும், தம்மை அழைப்பவரிடமும், தம்மிடம் உதவி கோருபவரிடமும் மிக அன்பாகப் பழகுவார். அவர்கள் மனம் களிக்கு மாறு இனிமையாகப் பேசுவார். அவர்கள் வந்த காரணத்தைக் கனி வுடன் கேட்டறிவார். காண்பதற்கு எளியவராக இருந்து, கடுஞ்சொல் அற்றவராய் விளங்கியதால் யாரும் எப்பொழுதும் சென்று அவரை அணுக முடிந்தது. "இவ்வளவு பெரியவரா இப்படி எளிமையாகப் பழகுகிறூர்?" என்று கண்டோரெல் லாம் வியக்கும் வண்ணம் காட்சி தந் தார். சுவாமிகளின் அன்புள்ளம் பெரியது. அவருடைய பண்பு நலன் அளவிடற்கரியது! அதனுலேயே அறிஞர் முதல் சாதாரண மக்கள் வரை இன்றும் அவரை அன்புடன் தம் நெஞ்சக்கோயிலில் நிறுத்தி வழி பட்டு வருகின்றனர்.

பன்மொழிப் பெட்டகம் :

ஒரு மொழியில் உள்ள இலக்கண இலக்கியங்களைக் கற்பதற்கும் தெளி வதற்குமே ஒருவருக்குக் காலமும் அறிவும் வாய்ப்பும் போதாததாக இருக்கிறது. ஆனுல் ஸ்வாமிகளோ வடமொழி, தமிழ்மொழி, தெலுங்கு, இந்தி ஆகிய நான்கு மொழிகளிலும் உள்ள அனைத்து நூல்களையும் கற் றறிந்ததுடன் பெரும் புலமையும் பெற்றுத் திகழ்ந்தார்; இந் நான்கு மொழிகளிலும் நூல்கள் பலவும், கட்டுரைகள் பலவும் எழுதி வெளி யிட்டார். உரைநடை, செய்யுள் ஆகிய இரு துறைகளிலும் தம் மொழிப்புலமையையும், நூற்புலமை யையும் வெளிப்படுத்தி வியப்படை யச்செய்தார். ஆங்கிலத்திலும் சுவாமிகட்குப் போதுமான ஞானம் அமைந்திருந்தது. இவ்வாறு இலக் கிய இலக்கண வளங்கள் நிரம்பப் பெற்ற மொழிகள் பலவற்றிலும் சுவாமிகட்கு வியக்கத்தக்க ஞானம் நிரம்பியிருந்தது.

வைணவத் திலகம் :

தமிழகத்தின் தனிப்பெரும் சமய மான வைணவ சமயம் தழைத் தோங்க அவதரித்த சுவாமிகள் வைணவ குலத் திலகராகத் திகழ்ந் தார்கள். வேத ஆகம புராண இதி காசங்களிலும், ஆழ்வார்களின் திவ்ய ப்ரபந்தங்களிலும் ஆழ்ந்துதோய்ந்து தாம் கண்டறிந்த அருங்கருத்துக்களை யெல்லாம் சுவாமிகள் உலகுக்களித்து வைணவத்துக்கு வாழ்வும் ஏற்றமும் தந்தனர். திருமண் தரித்துத் தெய் வப் பொலிவுடன் திகழ்ந்த சுவாமி களின் திருமேனியே திருமாலைச் சேவிப்பதைப் போன்ற உணர்வை யும் திருக்கோயிலைத் தரிசிப்பதைப் போன்ற நிறைவையும் கொடுத்தது. வைணவர் ஒருவர் எப்படி விளங்க வேண்டும் என்பதைத் தெரிந்து கொள்ளச் சுவாமிகளைத் தரிசனம் செய்வது ஒன்றே போதுமானதாக இருந்தது

சமயப் பொறையாளர் :

சுவாமிகளைப் பற்றி முழுவதுமாக அறியாத சிலர் "இவர் ஒரு தீவிர வைணவர்—பிற சமயத்தவரைக் கண் டால் வெறுப்பவர்" என்று கூறிய துண்டு. சுவாமிகளுடைய வாழ்வை ஆராய்ந்தால் உண்மை புலப்படும். சுவாமிகள் ஸ்ரீ வைணவரேயாயினும் பிற சமயத்தவரை எந்நாளும் வெறுத்ததில்லை. இதனுல்தான் சுவாமிகளைக் கண்டு சேவிக்கவும், நல்லாசி பெறவும் பல சமயத்தவரும் வந்து குழுமினர். வடகலையார், தென் கலையார், சைவர் எனப்படு வோரன்றிக் கிறித்தவர் முகம்மதியர் முதலான பிற சமயத்தினரும் சுவாமி களைக் கண்டு சேவித்ததை உலகமே நன்கு அறியும். எச்சமயத்தாரா யினும் எக்குலத்தாராயினும் தம்மை நாடி வந்தவரிடம் அன்பு பாராட்டி அவர்களின் ஐயங்களை யெல்லாம் போக்குவார். சுவாமிகளைக் காண வரும்போது அச்சத்துடன் வருபவர் கள் சுவாமிகளைச் சேவித்து ஞானம் பெற்றுத் திரும்பும்போது தத்தம் தெய்வத்தைக் கண்டு தரிசித்த மன நிறைவுடனும் மகிழ்வுடனும் செல் வதைப் பலகால் பார்க்க முடிந்தது. சுவாமிகளின் வாழ்வும் ஞானமும் சமயத்தை அடிப்படையாகக் கொண் டதாக இருந்தது. ஆயினும் அவர் நம் கண்களுககுச் சமயங்களின் எல்லை யையும் கடந்தவராகவே காணப்பட் டார். எல்லாச் சமயத்தினரும் சுவாமிகளைப் பாராட்டிப் பரவுகின் றனர். சுவாமிகளும் எல்லாச் சமயத் தவரையும் ஏற்று அன்பு பாராட்டி னூர். இவ்வரும் பண்பு பரம ஞானி யாகிய சுவாமிகட்கன்றி வேறு யாருக்கு வாய்க்கும்?

எழுத்தின் வேந்தர்:

சுவாமிகள் தம் பன்னிரண்டாம் வயது தொடங்கி இறுதிவரை எழுதி யருளிய கட்டுரைகள் ஏராளம்! ஏராளம்! அவர் எழுதி வெளியிட்ட நூல்கள் 1200க்கும் மேற்பட்டவை! அவர் எழுதிய நூல்களின் பெயர் களை மட்டும் வெளியிட்டாலே அதுவே ஒரு பெரு நூலாக அமை யும்! வேதங்கள், உபநிஷத்துக்கள், இதிகாசம், புராணம், திவ்யப்ரபந் தங்கள், ரஹஸ்யக்ரந்தங்கள் எனப் பல துறைகளிலும் தோய்ந்து தோய்ந்து தாம் கண்டறிந்த அரிய உண்மைகளை யெல்லாம் எளிமையாக அனைவர்க்கும் புரியும் வண்ணம் தம் எழுத்தாற்றலால் தந்தருளிய சுவாமி களின் உபகாரத்தை உலகம் தன் உச்சிமேல் வைத்து மெச்சிப் புகழ் வது நம் செவிகளில் விழுகிறதன்றே!

ஆயிரக்கணக்கான அரும்பெரும் புலவர்கள் ஒன்று கூடி ஒரு தலை முறையில் எவ்வளவு நூல்களை வெளி யிடமுடியுமோ அவ்வளவு நூல்களைத் தனியொருவராகவே இருந்து பல துறைகளிலும் பல மொழிகளிலும் இயற்றியருளினார் எனின், இவரை எழுத்தின் வேந்தர் என்பதா? வேந் தர்க்கெல்லாம் வேந்தர் என்பதா?

இன்னிசைப் பேச்சாளர்:

சுவாமிகளின் மதுரமான சொற் பொழிவு குறித்து அறிஞர் பலர் வியந்து பாராட்டியதுண்டு. பாராட் டினர் என்பதைவிடப் பகதி கொண் டனர் என்பதே மிகவும் பொருந்தும். சுவாமிகளின் சொற்பொழிவைக் கேட்பது இனிய சங்கீதத்தைக் கேட் பது போலிருக்கும். உயர் நீதிபதி ஸ்ரீ கே. எஸ். வெங்கட்ராமன் கூறு கிறார்:

"இவருக்கு 80 வயதுக்கு மேல் ஆகியும் இவருடைய பேச்சுக்கள் ரொம்ப ஸ்பஷ்டமாயும், கணீர் என் றும் ஏதோ 30 வயது வாலிபன் பேசுகிறாப்போல் இருப்பது வியக்கத் தக்கதே! ஸ்வாமிக்குப் பார்வையும் ஸ்ரவண சக்தியும் குறைந்து விட்டா லும் வாக்சக்தி இன்றும் பிரமாதமா யிருக்கிறது. ஸ்வாமி ஒரு பெரிய விஷயத்தைப் பற்றி மிகச் சுருக்க மாகவும் பேச வல்லவர்; ஒரு சிறு விஷயத்தைப் பற்றி—ஒரு பாசுரத் திலோ அல்லது ச்லோகத்திலோ ஒரு பதத்தைப் பற்றி மாத்திரம்—மணிக் கணக்கில் பெருக்கிப் பேச வேண்டு மானாலும் பேசுவார். இத்திறமை ஸ்வாமிக்குத் தவிர வேறு யாருக் காவது உண்டா என்பது சந்தேகம்"

உயர்திரு டாக்டர் வி. வி. இராமா நுசம் எழுதுகிறார்:

"எந்த விஷயத்தை எடுத்துக் கொண்டாலும், ஸரளமாய்ப்ரவஹிக் கும் தன் சொற்பொழிவின் மூலம் அவையினரை மந்திரத்தால் கட்டுண் டவர் போல் ஸ்வாமி செய்துவிடு வார். அவர் உபன்யாஸத்தைக் கேட்பதே ஒரு விருந்து."

தளரா உள்ளத்தர்:

தன் உடல் நலம் குன்றிய போதி லும் சரி, தன் கருத்துக்குத் தடை கூறிய போதிலும் சரி, தன் முயற்சி யில் பங்கம் நேர்ந்த போதும் சரி எந் நிலையிலும் உள்ளந்தளராத நிலை யைப் பெற்றிருந்தார். அவர் உள் ளம் உயர உயரப் பறந்து கொண்டே யிருந்தது. அவர் ஓய்வில் இருந்த போதும், உறங்கும் போதும் அவர் உள்ளம் ஓயாது வேலை செய்து கொண்டேயிருந்தது. உள்ளத்தின் உயர்வினாலேயே அவர் எல்லாத் துறைகளிலும் உயர்ந்து விளங்கினார். உலகியலில் உள்ளத்தை உழல விடா மல் உயர் ஞானத்திலேயே தம் உள் ளத்தை அழுத்தமுறப் பதித்து வைத்திருந்தார்.



அருள்மிகு பட்டிப்பெருமான் கோயில், பேரூர்—கோவை.

திரு. எஸ். ஜி. சேஷகிரி

**தாளாண்மை மிக்கவர் :**

சுவாமிகளின் முயற்சி ஒருபோதும் தளர்வுற்றதில்லை. ஒரு கண நேரத்தையும் வீணாக்கியதில்லை. வரும் கடிதங்கட்குத் தாமே பதில் எழுதுவார். ஒரு நாளைக்கு ஐந்துமணி நேரம் மட்டுமே உறங்குவாராம். நாளொன்றுக்கு முப்பது நாற்பது பக்கங்கட்குக் குறையாமல் எழுதும் பழக்கம் ஸ்வாமிகட்கு இருந்து வந்ததாம். தம் முயற்சியின் சிறப்பாலேயே கலவி கேள்விகளில் சிறந்து விளங்கினார், கட்டுரைகள், நூல்கள் பல எழுதினார், மணிக்கணக்கில் சொற்பொழிவாற்றி வந்தார்; பாரதத்தைப் பலமுறை பவனி வந்தார். ஸ்வாமிகளின் தாளாண்மை வியக்கத் தக்கது.

**வாதத்தில் வல்லவர் :**

தாம் கூறக்கருதிய கருத்தினைத் தடை விடைகளோடு கூறுவதில் சுவாமிகள் சமர்த்தர். இவர் வாதத் திறமை பற்றிக் கரப்பங்காடு சிங்கப் பெருமாள் ஸ்வாமிகள் கூறுவதைக் கேட்போம் :

''பிரதிவாதி பயங்கரர் என்கிற குடிப்பெயர் உமக்கு அந்வர்த்தமாகவேயிருக்கிறது. உலகத்திலுள்ள வித்வான்கள் யாவரும் தாமாகவே வந்து உம்முடைய வாக்கில் மாட்டிக் கொள்வார்; சிக்கிக் கொள்வதோடு நிற்க மாட்டார்கள், திக்கு முக்காடி நிற்பார். எத்தனை விதமான கள் திரண்டு போராடினாலும் உம்முடைய வாதந்தான் ஸித்தாந்தமாக நிற்கும்.''

தவறான உரைகள் பிறர் கூறுவதைக் கேட்கச் சகிக்காமலே மறுப்புரைகள் எழுதி வந்தார். உண்மையுரையை நிலைநாட்டவே வாதம் புரிந்து வந்தார் ''வலுச்சண்டைக்குப் போகமாட்டேன், வந்த சண்டையை விடமாட்டேன்''! என்று அவரே பலகால் எழுதியுள்ளார். அவர் வாதத் திறமையால் வெளி வந்த உண்மையுரைகள் பல.

**வாஞசைக்கு நல்லவர் .**

வாதத்தில் வல்ல ஸ்வாமிகள் வாஞ்சையுடன் பழகும் நல்லவர். இதுபற்றி அமரர் கல்கி அவர்கள் குறிப்பிட்ட மதுரமான வார்த்தையைக் கேட்போம். 29-6-69 தேதியிட்ட கலகியில் பக்கம் 16—ல் ''அண்ணங்கராச்சார்யார் ஸ்வாமி பிரதிவாதி பயங்கரம். ஆனால், பிரதிவாதம் செய்யாதவர்களுக்குப் பரம மதுரமானவர்.''

**உணர்தற்கு அரியவர் :**

ஸ்வாமிகளைப் பற்றி முழுவதுமாக அறிந்து கொள்ள ஒருவராலும் இயலாது. சமயப் பெரியார் என்பது உலக ப்ரசித்தம். ஆனால் அவர் ஒரு சிறந்த சமூக சீர்திருத்தவாதியுங் கூட! நம சமயம் பற்பல உயர்ந்த கொள்கைகளைப் பெற்றிருப்பினும், நம்மிடையே நிலவும் சாதிமதப் பாகுபாடும், சண்டையும், சச்சரவும் நம் சமய வளர்ச்சிக்குத் தடைகளாக உள்ளன என்பதைச் சுவாமிகள் தெளிவாக உணர்ந்திருந்தார். அதன் விளைவில் எழுந்ததே சுவாமிகள் எழுதி வெளியிட்ட ''தீண்டாமை தொலையாமை!'' என்னும் நூல்

**உலகத்தில் பெரியவர்.**

சுவாமிகள் நம்மைப் போலவே மண்ணுலகில் பிறந்தார். ஆனால் ஞானத்தாலும் சீலத்தாலும் உயர்ந்து விளங்கி, சொன்ன வண்ணம் நடந்து காட்டினார். சாதாரண மக்கள் முதல் அறிஞர் பெரு மக்கள் வரை சுவாமிகளைப் புகழ்ந்து கொண்டாடுகின்றனர். மூதறிஞர் இராஜாஜி, தமிழ்த் தாத்தா உ. வே சா, காஞ்சி ஜகத்குரு சங்கராசசார்ய ஸ்வாமிகள் போன்ற ஞானியரும் துறவிகள் பலரும் ஸ்வாமிகளின் அறிவு நலன்களையும், பண்பு நலன்களையும் வாயாரப் பாராட்டியுள்ளனர் எனில், நாம் அவரைப் பற்றி என்ன கூறிவிட முடியும்?

சுவாமிகளின் அருமபண்புகளைக் கேட்டறிவதும், கற்றறிவதுமன்றி வேறு எதுவும் செய்ய இயலாது. சுவாமிகளின் திருமேனியைச் சிந்தையில் நிறுத்தி வந்தித்து வழிபடுவோமாக! மீண்டும் வந்து அவதரித்தருள வேண்டி நிற்போமாக!

ஆச்சார்யர் அண்ணங்கரர் திருவடிகளே சரணம். ★



திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி கோவில் உட்தோற்றம்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501

